உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-27
துன்முகி-சித்திரை -7
19-4-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

## நற்றிணை-தெளிவுரை

### குறிஞ்சி

களவிற் புணருந் தலைவன் சிலபொழுது வாராமையால் வாட்டமுற்ற தலைவி தோழியைநோக்கி நொந்து கூறியது.

விழுந்த மாரிப் பெருந்தண் சாரற், கூதிர்க் கூதளத் தலரி நாறு, மாதர்
வண்டி னயவருந் தீங்குரன், மணநாறு சிலம்பி னசுண மோர்க்கு,
முயர்மலை நாடற் குரைத்த லொன்றோ, துயர்மருங் கறியா வன்னைக்
கிந்நோய் தணியுமா றிதுவென வுரைத்த லொன்றோ, செய்யா யாதலிற்
கொடியை தோழி, மணிகெழு நெடுவரை யணிபெற நிவந்த, செயலை
யந்தளி ரன்னவென், மதனின் மாமெய்ப் பசலையுங் கண்டே 244

கூற்றங்குமரனார்

தோழீ! நீலமணி போன்ற நீண்டமலையில் அழகுபெற உயர்ந்த அசோகந் தளிர்போன்ற எனது நல்ல மேனியின் அழகைக் கெடுக்கின்ற பசலையை நீ கண்டும், மழைபெய்த பெரிய குளிர்ந்த சாரலின்கண் கூதிர்க்காலத்துக் கூதாளிப்பூவின் மணம் வீசுகின்ற அழகிய வண்டினது விருப்பமுற்ற இனிய ஓசையை நறுமணங் கமழுகின்ற மலைமுழையிலிருக்கும் அசுணமாகிய விலங்கு செவி கொடுத்துக் கேட்கின்ற உயர்ந்த மலைநாடனுக்குச் சொல்லுவதாகிய ஒன்றாவது எனது துன்பமிகுதியை அறியாத அன்னைக்கு இந்த நோய் தணியும்வழி இன்னதென்று உரைத்தலொன்றாவது செய்தாயல்லை. ஆதலின் நீ கொடுமைமிக்குடையவளாவாய்.

பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

ஆயுந் தோறுந்தோறு மின்பந் தருங்கலை யாங்கறிவு
மாயுந் தோறுந்தோறு மின்பந் தரும்வள்ளல் வார்கழல்
தேயுந் தோறுந்தோறு மின்பந் தருஞ்சந்து தேங்குழனிற்
றோயுந் தோறுந்தோறு நேராத வின்பஞ் சுரந்திடுமே.

தணிகைப் புராணம் **2230**

உரை:- 'கலை - சாத்திரங்கள், ஆயுந் தோறும் தோறும் - ஆராயுந் தோறும் ஆராயுந் தோறும், இன்பம் தரும்-அறிவுக்கு இன்பத்தை அளிக்கும், ஆங்கு அறிவு-அங்கே கருவியாயிருந்து உதவுகின்ற மனித அறிவு, மாயுந் தோறும் தோறும் - அழியுந்தோறும் அழியுந் தோறும், வள்ளல் வார்கழல்கள் — வற்றாத் திருவை வழங்குபவனாகிய சிவ பெருமானது நீண்ட திருவடிகள், இன்பம்தரும் — சிவபோக மாகிய பேரின்பத்தை நல்கும், சந்து-சந்தனக்கட்டை, தேயுந் தோறும் தோறும் - தேயுந் தோறும் தேயுந்தோறும், இன்பம் தரும் - நறுமணந் தந்து உவகையை ஊட்டும், தேன் குழல்-தேன்பொருந்திய மலர்க் கூந்தலையுடைய மங்கையே, நின் தோயுந்தோறும்தோறும் - உன்னைப்புணருந்தோறும்புணருந் தோறும், நேராதஇன்பம்-அதுவரைகைகூடாத உயர்ந்த சுகம், சுரந்திடும் - பெருகிவரும்' என்பதாகும்

தணிகைப்புராணத்தைத் தமிழ்ச்செய்யுள் நடையில் உதவிய பெரியார் கச்சியப்ப முனிவர். இவர் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துப்பஞ்சாக்கர தேசிக பரமாசாரிய சுவாமிகள் மரபில், ஞானேபதேசமும் சைவ சந்நியாசமும் பெறப் பேறுபெற்ற பெரியார். திராவிட மாபாடியஞ் செய்தருளிய சிவஞான சுவாமிகளின் நன்மாணவர் பன்னிருவருள் இவரும் ஒருவர்.

திருத்தணிகைப் பதியில் காஞ்சிப்புராணத்துப் பரம்பரைச் சைவவேளாளர் குலத்தில் அபிஷிக்தர் மரபிலே அவதரித்த இப்பெரியார் இளம்பருவத்திலே கற்கவேண்டிய நால்களைக் கற்று, ஒழுக்கம் அன்பு அருள் முதலிய நற்குணங்களையுடையவராய்ச் சிவத்தல யாத்திரை செய்யத் தொடங்கித் தொண்டைநாட்டுத் தலங்களைத் தெரிசித்துக்கொண்டு சோழநாட்டில் சிதம்பரமுதலிய திருப்பதிகளை வணங்கி ஞானக்கோமுத்தியாகிய திருவாவடுதுறைப் பதியை வழிபட வந்தடைந்தார்.

சிவராசதானியாகிய திருவாவடுதுறை மடாலயத்தில் சித்தாந்த சைவ ஞானபாநுவாய் எழுந்தருளியுள்ள ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளைத் தெரிசித்த அளவில், அக்குருமூர்த்திகளின் அருள்நோக்கம் சித்திக்கப் பெற்று அப்போது அங்கே சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த அம்பலவாண தேசிக மூர்த்திகளை ஒடுக்கத்திற் கண்டு தெரிசித்துச் சமய விசேட தீட்சைகளைப் பெற்றுத் துறவறத்தை அடைந்து நிர்வாண தீட்சையும்பெற்றுக்கொண்டார்.

வடமொழிக் கடலும் தென்மொழிக் கடலும் கரைகண்டுணர்ந்த பேரூர் வேலப்பதேசிக மூர்த்திகளிடம் அநுக்கிரகம் பெற்றுமெய்யுணர்வின்முற்றுப் பேறுடையவராய் விளங்கிய மாதவச் சிவஞான யோகிகளை வித்தியா குருவாகக் கொண்டு இலக்கணம், இலக்கியம், தருக்கம், சாத்திர முதலிய நூல்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்து மகாவித்துவானெனப் பெயர்பெற்று இவர்விளங்கினர். இவரது செய்யுளியற்றும் ஆற்றலையும் சொற்பொழிவாற்றும் நலத்தையும் கண்டு பாராட்டாதவர், அந்நாளில் எவருமே இல்லையாம்.

மனனஞ் செய்த பழம்பாடல்களைத் தங்குதடையின்றி விரைந்து சொல்லுவது போலச் சொற்சுவை பொருட்சுவைமிக்க புதுப்பாடல்களை, எழுதுவோர் எழுதமுடியாத அவ்வளவுவிரைவில் சொல்லுகின்ற பேராற்றல் இவருக்கு இருந்தது. இதனல் இவர் 'கவிராட்சசர்' என்று அனைவராலும் புகழப்பெற்ருர்.

சிவஞான சுவாமிகள், தம்மால் ஆக்கப்பெற்ற காஞ்சிப்புராணத்துச் செய்யுள்நடை நூலை, இரண்டாங் காண்டம் பாடிமுடித்து நிறைவேற்றும்படி இம்முனிவ

பெருமானுக்கு ஆணை தந்தருளினார்களென்றால், சுவாமிகள் இவரிடத்து வைத்திருந்த நன்மதிப்பை இதுகொண்டு நாம் நன்கு அறிந்துகொள்ளலாமல்லவா?

கச்சியப்ப முனிவரது குருப்பத்தித் திறத்தை அளவிட்டுச் சொல்லமுடியாது. சென்னைமாநகரிலிருந்த சிவபக்தர்களும் செல்வர்களும் விநாயக புராணம் இவரால் இயற்றப் பெற்றதற்கு மகிழ்ந்து அடியுறையாக இரண்டாயிரம் வராகனிட்டார்கள். அப்பொருளைக் கொண்டு திருவாவடுதுறை ஆதீன முதற்குரவராகிய நமசிவாய மூர்த்திகள் சந்நிதி மண்டபப்பணியை அழகு பெறச் செய்தருளினாரென்பது வரலாறு.

இவ்வாசிரியர் பெருமானால் இயற்றப்பெற்ற புராணங்கள் ஆறு. அவை தணிகைப் புராணம், விநாயகபுராணம், திருவானைக்காப் புராணம், பேரூர்ப் புராணம், பூவாளூர்ப் புராணம், காஞ்சிப்புராணம் என்பன மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இம்முனிவர் பெருமானை உபாசனா மூர்த்தியாகக் கொண்டிருந்தார்களென்றும் செய்யுட்களின் பொருள் விளங்காமல் மயக்கமுண்டாகிய வேளைகளில் இவர் திருவடிகளைத் தியானித்தே விளக்கம் பெற்றார்களென்றும் அவர்கள் வரலாறு தெரிவிக்கின்றது.

தமிழிலேயுள்ள புராணங்கள் பலவற்றுள்ளும் இலக்கிய நலத்தாற் சிறந்து விளங்குவது தணிகைப்புராணம். இதிலுள்ள இருபொருட்சிலேடை, முப்பொருட்சிலேடை, நாற்பொருட்சிலேடை, ஐம்பொருட்சிலேடை, அறுபொருட்சிலேடைப் பாடல்களில் ஈடுபட்டுச் செந்தமிழ்ச் செல்வராகிய பாண்டித்துரைத் தேவரவர்கள், மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ் முதற்றொகுதியில் அப்பாடல்களுக்கு உரை எழுதி வெளியிட்டார்கள்.

செந்தமிழ்மொழியின் சிறப்பியல்புக்குக் காரணமாயிருப்பது, அகமும் புறமுமாகிய இருவகைப் பொருளமைதியும் வரம்புபட்ட இலக்கணத்தின் வழிப்பட்டு நிற்பதேயாகும். பெரும்பாலும் புறப் பொருளிலக்கணத்தின் அடிப்படையிலேயே மற்றைப் புராணங்களை அவ்வவ்வாசிரியர்கள் அமைத்துத் தந்துள்ளார்கள். அவற்

றுள், ஒரோவழி அகப்பொருட் பகுதிகளைக் கூற வேண்டியவி டத்தும் அருகிய நிலையிலேயே அவர்கள் கூறியுள்ளார்கள்.

தணிகைப்புராணத்தில் முருகப்பெருமான் வள்ளி நாயகியாரைத் திருமணம் புரிந்து கொண்ட வரலாற்றைக் கூற முற்பட்ட ஆசிரியர் களவுப் படலமென ஒரு பகுதியை வகுத்துக்கொண்டு அதில் 643 செய்யுட்களை அமைத்து, களவியல் துறைகள் அத்தனையையும் இயைபு பொருந்த எடுத்து விளக்கியுள்ளார். இது வேறு எந்தப் புராணத்திலும் இல்லாததும் எந்த ஆசிரியருக்கும் வாய்க்காததொருவாய்ப்புமாகும்

களவியலுள் தலைமகளாரற் புணரும் புணர்ச்சியின் வகை நான்கு எனவும் விரி பதினெந் தெனவும் நம்பி அகப்பொருள் கூறும். அவ்விரி பதினைந்தி னுள், தலைவியின் வறிதுநகைத் தோற்றத்தைக் கண்ட தலைவன் முகை மொக்குளுள்ளது நாற்றம்போற் பேதை, நகை மொக்குளுள்ளதொன் றுண்டு' என அறிந்து, நறிய நல்லோள்மேனி முயங்கற்கினிதெனத் துணிந்து அவள்பாற் கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்று ஐம்புல இன்பமும்பெற்று, அவ்வாறு பெற்ற இன்பத்திற்கு மகிழ்ந்து அதனை வழங்கிய அவளை நயந்துபாராட்டுதல் இடம்பெற்றிருக்கும்.

அவ்வாறு தலைவன் நயக்கின்ற பொருளையே மேற்கண்ட பாடலிற் காண்கின்றோம். மனிதன், தனது வாழ்க்கையில் இன்ப துன்பங்களாகிய இரண்டையும் நுகருகின்றான். அவ்விரண்டினையும் அறிய அவனுக்கு அறிவு துணையாயிருக்கின்றது அவ்வறிவுக்கு இன்பமொன்றையன்றித் துன்பத்தை எவ்வாற்றானுந் தராதது கலை. அதனை ஆராய்வார்; ஆராய ஆராயப் புதுப்புது இன்பத்தை அடைவர். 'நவில்தொறும் நூல் நயம் போலும்' என்பார் திருவள்ளுவர்.

ஆழ்ந்து ஆராய்பவர்க்கு எத்துணைப் பழயகலைகளும் புதியனவாகத் தோன்றும். புதிது புதிதாகப் பொருளைப் புலப்படுத்துவனவே கலைகள். புதிது புதிதாகப் பொருளைக் காண்பவனே புலவன். பொருள் நிறைந்த கலைகள் அறிவுநிறைந்த புலவனுக்கு ஆராயுந்தோறும் புதியனவாகி இன்பந்தருமென் பதில் ஐயமில்லை

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

அத்திருவள்ளுவருக்கு மாறான இராமலிங்கர் நவீனருக்குப் பிரமாண புருஷராயினர், திருவள்ளுவர் எங்கோ போயினர். 'பிறப்பொக்கு மெல்லாவுயிர்க்கும்' என்ற அடிக்குச் சரியான பொருளை நவீனர் அறியார். ஆயினும் ஒன்றே குலம் என்பதற்கு அவ்வடியைக் கொண்டு அவர் சப்பைகட்டுவர். அவர் கருதுகிறபடி குலம் ஒன்றே யென்பது மெய்யானல் பெண்டிர்க்குக் கற்புடைமைஅவசியமா என்ற வினு எழவே செய்யும். அதுபற்றி மேலும் சங்கித்தற் கிடனுண்டாகாத விதத்தில் அவர் அவ்வினவுக்கு விடை கூறிவிட்டுத் தம்கொள்கையைப் பிரசங்கிப்பாராக. சாதியைப் பழிக்கும் பிரசாரமாவது சைவாலயங்களில் ஆதிசைவரே அர்ச்சனையாதிகள் செய்யவேண்டுமென்ற சிவாகம விதியை அதிக்கிரமிப்பதற்குச் செய்யப்படுகிற முன்னேற்பாடேயாகும்.

இராமலிங்கர் சமயங்களைக் கண்டித்துப்பாடினர். பொய்ச் சமயங்களைக் கண்டிப்பது பொருந்தும். ஆனல்இதுபொய்ச் சமயம், இது மெய்ச் சமயம் என்ற வியவஸ்தையின்றி எல்லாச்சமயங்களையுமே அவர் நிந்தித்தார். 'எச்சமயங்களும் பொய்ச்சமய மென்றீ ரிச்சமயமிங்கு வாரீர், மெய்ச்சமயந் தந்திர் வாரீர்' என்ற அவர் பாட்டுக் காண்க. உலகில் எச்சமயமும் இருக்கக்கூடாதென்பது தான் அவரது விருப்பம். ஆனல் ஆரியசமாசம், பிரமசமாசம், பிரமஞானசபை, அருள்நெறித் திருக்கூட்டம் முதலியனபோல் அவராலும் ஒருசங்கம் சிருட்டிக்கப்பட்டது. அதுதான் சமரச சுத்த சன்மார்க்க சங்கம் என்பது. அச்சமாசம், சபை, கூட்டம் என்ற சொற்கள் சமயம் என்ற பொருளிற்ருனிருக்கின்றன. ஆகலின் அவையும் வெவ்வேறு சமயங்களே. அதுபோல் அச்சன்மார்க்க சங்கமும் ஒரு சமயந்தான். அதை அப்பாட்டில் 'மெய்ச்சமயம்' என அவர்சொல்லிப் புகழ்ந்துகொண்டார். சமயமென்ற சொல்லில் வெறுப்புக் கொண்ட அவர் தம் சங்கத்

தைச் சமயமெனச் சொல்லவைத்தது அவாது ஊழேயாமென்க. அவர் நிந்தித்த சமயங் களுட் சைவமும் ஒன்றென்பது முன்னர்க் காட்டப்பட்டது. அவரோ, பிறரோ செய்கிற எத்தகைய நிந்தையாலும் எச்சமயத்தையும் அழிக்கமுடியாது. அவரெல்லாம் சமாசம், சங்கம் முதலிய பெயர்களைச் சூட்டிப் புதுச் சமயங்களைக் கற்பிக்கலாம். புராதன சமயங்களோடு அவையுஞ் சேர்ந்து சமயங்களின் தொகை பெருகும். அதனால் மக்களுக்குட் பிளவுகளும் அதிகமாம்.

இராமலிங்கர் சாத்திரங்களைக் குப்பைகளென்றனர். ஆனால் 'சாத்திரம்பல பேசும் சழக்கர்காள், கோத்திரமுங்குலமுங் கொண்டென்செய்வீர், பாத்திரஞ்சிவமென்று பணிதிரேல், மாத்திரைக்குளருளுமாற்பேறரே' என்பது திருமுறை. சாத்திரத்திற் கோத்திரம்வேண்டும், குலம் வேண்டும், பாத்திரஞ் சிவமென்று பணியுங் கொள்கை வேண்டும் என்பன சொல்லப்பட்டன. சிவபெருமானொருவரே சர்வான்மசேவியராயுள்ளவரென்ற பதிவிரதா தர்ம புத்தியோடு அவரைப்பணியும் பாக்கியம் பாவகாரிகளுக் கிராது. ஏதோ ஒருசில சிவபுண்ணியப் பயனாகப் பொருள்வளம், கல்விப் பெருக்கம், தேகசுகம் முதலியவற்றைப் பெற்றவருள் அவை பற்றித் தம்மை வியந்து புத்தி கெட்டுச் சிவசேவையை மறந்து திரிவாருளராதல்போலக் கோத்திர குல நலன்களைப் பெற்றவருள்ளும் அவைபற்றித் தம்மை வியந்தும் புத்திகெட்டும் பாத்திரஞ் சிவமென்றும் பணியாமல் திரிவாருளர். அவரைச் 'சழக்கர்காள்' என விளித்துக் கோத்திர குல நலன்கள் உள்ளனவேயாயினும் உடலோடு ஒட்டியனவே, உடல்போனால் அவையும் போம். அவைஉயிரோடுசெல்லா. சிவபிரானைப் பணிவதே தலையாய கடன், அதனை யாற்றுங்கள், அப்புண்ணியமே உங்களுயிரோடு சென்று அதற்குப் பேரின்பத்தை நல்கும் எனக் கருணைமேலிட்டு அவருக்கு உபதேசிக்கிறார் அத் திருமுறையாசிரியர். அது சாத்திர நிந்தையாகாது. இராமலிங்கரால் அப் பாடலின் உட்கிடையைக் காண முடியவில்லை. அதனால் சாத்திரங்களையே குப்பையென அவர் பழித்தார். ஆனால் பிறிதோரிடத்தில் 'சாத்திரங்களிற் சிறந்தது திருமூலர் திருமந்திரம்' என்ற அவர் வாக்கியங் காணப்

(10ம் பக்கம் பார்க்க)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி சித்திரை-7

## நாகப்ப ஐயா

புண்ணியம் என்பது இரு வகைப்படும். ஒன்று பசுபுண்ணியம்; மற்றொன்று பதி புண்ணியம். உயிர்களுக்கு உண்டாகும் உறுகண்களை அகற்றி அவற்றிற்கு மகிழ்வூட்டுதல் பசுபுண்ணியமெனவும், இறைவனுக்குத் திருத்தொண்டு செய்தல் பதிபுண்ணியமெனவுஞ் சொல்லப்பெறும். பல பிறவிகளிற் செய்த பசுபுண்ணிய முதிர்ச்சியினாலேயே, பதிபுண்ணிய விருப்பம் நிகழும்.

பசுபுண்ணியங்களை வகைப்படுத்தி முப்பத்திரண்டினுள் அடக்கி வைத்தனர் நம்முன்னோர். உடம்பில் தினவெடுத்த பசு உராய்ந்து தினவைத் தீர்த்துக் கொள்ளுதற்கேதுவாக அவை கூடும் மந்தைகளில் கல்நட்டுவைத்தலை ஒரு புண்ணியச் செயலாகக் கூறுகிறது நமதுநூல். மனிதஇனத்திற்குமட்டுமன்றி, மற்ற இனத்திற்கும் நலஞ்செய்தல் இன்றியமையாதது என்று வற்புறுத்தியவர் நமது நாட்டவரே.

மன்னுயிர்களிடத்து வைத்த இரக்கத்தினால் அவற்றிற்கு நலஞ் செய்ய நாட்டங்கொண்ட ஒருவன் நாளாவட்டத்தில் ‘இலங்கும் உயிருடல் அனைத்தும் ஈசன் கோயில்’ என்றஉணர்வுவரப்,பசுபுண்ணியத்

தில் பதிபுண்ணியப் பேற்றைப் பெற முற்படுவான். அவ்வாறுஉயிர்களனைத்திலும் ஒழிவற நிறைந்த உத்தமனைக் காண்கின்ற காட்சி ஒருசில பெரியவர்களுக்கே அமையும். அதனாலேதான், திருக்கோயில் முதலிய திருப்பணிகளைச் செய்வதன் வழியாகப் பெறத்தக்க பதிபுண்ணியப் பேற்றுக்கு நமது முன்னோர்களிற் பலர், உரியவர்களானார்கள்.

அவ்வாறு திருக்கோயில் திருப்பணியையே வாழ்க்கையின்குறிக்கோளாகக் கொண்டிருந்து மதுரை மீனாட்சியம்மை உடல்வளர்க்குந் தாயாகவும் வந்து உணவுதர உண்டு பேரின்பம் பெற்ற வயிநாகரம் நாகப்ப ஐயா அவர்களின் நினைவுநாள் (சித்திரை மகம்) **20-4-56** வெள்ளிக்கிழமையாகும். அந்த நாளில் அவர்களை நினைந்து வழிபட்டு நற்பேறு பெறுவோமாக.

## உமாபதி சிவம்

சந்தான குரவருள் ஒருவராகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகளின் திருநாள் (சித்திரை அத்தம்) **23-4-56** திங்கட்கிழமை. உயிர் எந்த உடல்கொண்டு பிறந்தாலும் உரிய பக்குவத்தைப் பெற்றால் முத்தி சித்திக்கும்' என்னும் பேருண்மையைப் பெற்றான் சாம்பானை முன்னிறுத்தியும் முள்ளிச் செடியை முன்னிறுத்தியும் உணர்த்திய பரமகுரவர் உமாபதி சிவம்.

காண்டற்' கரிய கடவுளாகிய தில்லைச் சிற்றம்பலமுடையார் தனது அடியார்க் கெளியராந் தன்மையை உமாபதிசிவத்திற்கு எழுதிய சீட்டுக்கவியிலே வைத்து உறுதிப்படுத்தினர். முதற்குரவராகியமுக்கட்பெருமானாலேயேஞானாசாரியராயிருக்குந் தகுதி உள்ளவரென்று மதிக்கப்பெற்ற உமாபதி சிவத்தின் அருள்நோக்கம் பெற்றாலன்றி நாம் கடைத்தேறவழியேது? அந்தப் பெருங்குரவரை அவரது திருநாளில் மனமொழி மெய்களால் வழிபட்டுப்போற்ற வேண்டுவது நமது கடமையாகும் என்பது இந்தவாரத்தில் கருத்தில்கொள்ள வேண்டிய மற்றொன்றாகும்.

( 7ம் பக்கத் தொடர்ச்சி )

படுகிறது. குப்பைகளிற் சிறந்தது திருமந்திரக் குப்பையென்பது அதன் கருத்தா? இன்னும் அவர் பாடற் றிரட்டுச் சாஸ்திரமா? அசாஸ்திரமா? அவர் போற்றுஞ் சமரச வேதமாவது யாது? அது சாத்திரமா? அன்று? அவை குப்பையல்லாதன என்பதற்கு ஆதாரம்வேண்டும். சைவசமய ஆலயக் கிரியைகளுக்குச் சிவாகமங்கள் விதிநூலாயிருந்துவரும் மரபைக் குலைக்கவே அவர் சாத்திப நிந்தையி லிறங்கினர்.

'எம்மதமும் சம்மதமே என்ற வள்ளலாரின் கொள்கை......' (28-12-55 தமிழ்நாடு) என்கிறூர் நவீனர். இராமலிங்கர் அப்படியுஞ் சொல்லித்தா னிருக்கிறூர். எம்மதமும் சம்மதமே யென்ற அவருக்கு எச்சாதியுஞ் சம்மதம், எச்சாத்திரமுஞ் சம்மதம் என்பனவுங்கொள்கையாய்த் தானிருக்கவேண்டும். அது வாஸ்தவமா? அம் மூன்றையுஞ் சிலபாடல்களில் நிந்திப்பதும் சில பாடல்களில் சம்மதிப்பதும் எப்படிப்பொருந்தும்? நிந்திப்பதும் சம்மதிப்பதும் அவருக்கு ஒன்றுபோலும்.

'ஒருவனே தேவன் என்ற உலகப் பொதுநெறியைப் போதித்' (29-10-55 தமிழ்நாடு)தார் இராமலிங்கர் என்கிறூர் நவீனர்.

(தொடரும்)

## சைவப் பஞ்சாங்கம்

தருமபுர ஆதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்த வாக்கிய துன்முகி வருஷ சைவப் பஞ்சாங்கம் ஆதீன வெளியீடு எண் 363. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் அருளாணையின் வண்ணம் ஜோதிஷார்ணவம் பிரம ஸ்ரீ முத்து ஜோய்யரவர்களின் உதவிகொண்டு இது வெளியிடப்பெற்றுள்ளது. சைவ விரதங்களைத் தெளிவாய் அறிந்துகொள்ள இப்பஞ்சாங்கம் நல்ல துணையாயிருக்கின்றது.

## பதவி மாற்றம்

தேவகோட்டை ஏப் 15

தேவகோட்டை நகர மன்ற ஆணையராக இருக்கும் திரு. எஸ் சிதம்பரம், சிதம்பரம் பகுதிப் பஞ்சாயத்து அதிகாரியாக மாற்றப்பட்டுத் தேவகோட்டை நகரமன்ற ஆணையராக திருப்பூரில் வரிப் பரிசீலனை அதிகாரியாக இருந்த திரு கிருஷ்ணமூர்த்திபிள்ளை நியமனம்செய்யப் பட்டுள்ளார்.

## செங்கோல் ஆதீன கர்த்தர்

பெருங்குளம் ஏப் 2-

செங்கோல் ஆதீன கர்த்தரும் தமிழ்நாடு அருள்நெறித் திருப் பணி மன்றச் செயல் தலைவரு மான ஸ்ரீ ல ஸ்ரீ ஆறுமுகசுந்தர சத்திய ஞான பரமாசாரிய சுவாமிகள் குன்றக்குடி திரு வண்ணுமலை ஆதீனத்திற்கு விஜ யம் செய்தார்கள். ஆதீன முகப் பில் கோவில் மரியாதையுடன் ஆலத்தியிட்டு இளவரசு சுவாமி கள் மாலைஇட்டு வரவேற்றனர்.

குன்றக்குடி அடிகளாரும் செங்கோல் ஆதீன கர்த்தரும் திருப்பணி மன்ற வளர்ச்சிக் குரிய திட்டம்பற்றிச் சம்பாஷித் தனர்.

திருப்பணி மன்றத்தில் நடை பெற்று வரும்ஆசிரியப் பயிற்சிப் பள்ளி, ஆரம்பப் பாடசாலைகள் புண்ணிய விடுதிகள் ஆகியவற் றைச் செங்கோல் ஆதீனகர்த்தர் பார்வையிட்டார்கள். பிரான்மலை சதுர்வேதிமங்கலம் திருப்பத் தூர் முதலான ஆலயங்களுக்கு இரு சந்நிதானங்களும் விஜயம் செய்து வழிபாடுசெய்தனர்.

---

## மதுரை

சென்னை ஏப் 10-

மதுரை ஸ்ரீமீனுட்சி சுந்த ரேசுவரர் தேவஸ்தான நிருவாக அதிகாரி திருடி எச் விவேகா னந்தம்பிள்ளை, சென்னை சென்ன மல்லீசுவரர், சென்னை கேசவப் பெருமாள் கோயில்களின் நிரு வாகியாகவும் சென்னை மண லி இலட்சுமண முதலியார் தரும ஸ்தாபனநிருவாக அதிகாரி திரு ஆர் கிருஷ்ணசாமி பிள்ளை மதுரை ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசு வரர் தேவஸ்தான நிருவாகஅதி காரியாகவும் நியமனம் செய்யப் பட்டுள்ளனர்.




### தங்கம், வெள்ளி

மதுரை ஏப் 17

| | | | |
|---|---|---|---|
| பாட்லா | 106 | 0 | 0 |
| சவரன் | 67 | 8 | 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 | 0 | 0 |
| வெள்ளி 100தோலா | 183 | 0 | 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 14 | 0 |

( 5ம் பக்கத் தொடர்ச்சி )
இன்னதென்பதையும் கலைஞன் இன்னனென்பதையும் ஆசிரியர் குறிப்பால் உணர்த்தினர்.

உலகமும் உயிரும் இறைவனுமாகிய முப்பொருள்களில் நடுவணதாகிய உயிர் உலகத்தையும் இறைவனையும் அறியும் கடப்பாட்டை உடையது. உயிர் உலகத்தை அறிவதற்கு இறைவனது அறிவு உயிரறிவில் ஒடுங்கி நிற்றலே போதுமானதாகும். அவ்வுயிர் இறைவனை அறிய வேண்டுமானால் அதன் அறிவு அறவே ஒழிந்து இறைவனது அறிவு அவ்வுயிருக்காதல்வேண்டும்.

சொல்லும் பொருளுமாகிய இவற்றின் வாயிலாக உயிரறிவும் அறிவைப் பாச அறிவென்றும், உலகம் தனக்கு வேருயது என அது அறியும் அறிவைப் பசு அறிவென்றும் சொல்லுவர். பதி அறிவென்பது, எல்லாவற்றையும் அறிபவனுகிய இறைவன் தன்னியல்பையும் உயிரியல்பையும் அவ்வுயிருக்கு விளக்கி நிற்கும்போது உண்டாவது. அதுதிருவருளைத் துணையாகக் கொண்டு இறைவனை உயிரறிவிற்கண்டு அவ்வருளோடு கூடி நிற்கும். அவை நீங்கவே ஆண்டவன் திருவடிகள்ஆன்மாவுக்கு இன்பத்தை நல்குமென்பது இரண்டாவது வரியால் அறியப் பெறுகின்றது.

சந்தனம் பொறி கருவியாக நுகரத்தகுந்த-இயல்பாகவே நறுமணமுடைய பொருள் என்றாலும், தேய்ப்பதாகிய செயல் செய்த வழியன்றி அதன் மணத்தை நுகருமாறில்லை. தலைவியும் பொறிகள் கருவிகளாக நுகரத்தகுந்த - இயல்பாகவே எல்லா நலங்களும் வாய்க்கப் பெற்ற பொலிவுடையவள். அவள்பால் இன்பம் பெறுதற்கும் தோய்தலாகிய செயல் வேண்டப்பெறுவதாகும். என ஆசிரியர் கூறிய நயம் அறிந்து மகிழுதற்குரியதாகும். 'அறிதோறறியாமை கண்டற்றாற் காமம், செறிதோறும் சேயிழை மாட்டு' என்ற திருக்குறள் இங்கே நினைவுகொள்ளத்தக்கதாகும்.

இக்கொடியிடைதோள் புணர்ந்தாற் புணருந்தோறும் பெரும்போகம் பின்னும் புதிதாய், மணந்தாழ் புரிகுழலாள் அல்குல் போல வளர்கின்றதே' என்ற திருக்கோவைப் பகுதியின் கருத்து, இவ்வாசிரியரது திருவாக்கில்வேறுவடிவம்பெற்று இறுதிவரியாக வந்துள்ளது என்று சொல்வதும் பொருந்துமல்லவா?

## செங்கோல் ஆதீனம்

பெருங்குளம் ஏப் 4-

செங்கோல் மடம் ஆதீனத்திற்குக் குன்றக்குடி திருவண்ணமலை ஆதீனம் இளவரசு நடராஜ தேசிக சுவாமிகள் விஜயம் செய்தார்கள். செங்கோல் ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுந்தர சத்தியஞான சுவாமிகள் மாலையிட்டு வரவேற்றார்கள். ஆதீன தேவஸ்தானத்திலிருந்து மேள தாளம், விருதுகள், பூரண கும்ப மரியாதையுடன் வரவேற்பு நடந்தது. சந்நிதானங்கள் பக்தகோடிகளுக்கு வெண்ணீறு அருளி ஆசிபுரிந்தார்கள்.

## அமைச்சரவை

கொழும்பு ஏப் 12-

இன்று இலங்கைக் கவர்னர்-செனரல் முன்னிலையில் உறுதி எடுத்துக்கொண்டு திரு பண்டாரநாயகா தலைமை அமைச்சர் பதவியை ஏற்றார். அவரே பாதுகாப்பு, வெளிநாட்டுத் துறை அமைச்சராகவும் பணியாற்றுவார்.

13பேர்கள் கொண்ட அமைச்சரவையைத் திரு பண்டாரநாயகா அமைத்துள்ளார். அமைச்சர்கள் விவரம் பின்வருமாறு:

திருவாளர்கள் டபிள்யூ தகநாயகா(கல்வி) சி பி டி சில்வா (நிலங்கள். நிலங்கள் வளர்ச்சி) எம் டபிள்யூ யூ எச் டி சில்வா (நீதி) பி எச் டபிள்யூ டி சில்வா(தொழில்,வாணிபம்,மீன் பிடிப்புத்துறை) ஸ்டான்லி டி சூசா(நிதி) பிலிப் குணவர்தன (விவசாயம், உணவு) டி பி இலங்காரத்ன (தொழிலாளர் துறை, வீட்டு வசதி, சமூக சேவைகள்) எ பி ஜெயசூர்யா (உள்நாட்டு விவகாரம்) ஜெயவீரா குருப்பு (தலத்தாபனங்கள், கலாசார அலுவல்கள்) சி ஏ எஸ் மரைக்கார் (தபால், வானொலி, விளம்பரம்) எம் சேனநாயகா (போக்குவரத்து) திருமதி விமலா ஜெயவர்தன (சுகாதாரம்)

இந்த அமைச்சர்கள் இன்று பிற்பகல் 4-30 மணிக்கு உறுதிமொழி எற்றுப் பதவி ஏற்றனர் புது அமைச்சர்களில் 10பேர்கள் மகாசன ஏக்சத் பெரமுனவின் சார்பில் போட்டியிட்டு வெற்றி பெற்றவர்கள். திரு ஏ பி ஜெயசூர்யா பாராளுமன்ற மேல்சபை உறுப்பினர். இவர் பொமுனவின் செயலாளருமாவார். திரு எம் டபிள்யூ எச் டி சில்வா பெரமுனவின் உறுப்பினர். இவர் விரைவில் மேல்சபை உறுப்பினராக நியமனம் செய்யப்படவிருக்கிறார்.

## திரு-தமிழகக்கோயில்களின் எதிர்காலம்

திருவனந்தபுரம் ஏப் 10

திருவாங்கூர் கொச்சி இராசப் பிரமுகரின் ஆலோசகரான திரு பி எஸ் ராவை இந்து மத மாநாட்டுப் பிரதிநிதிகள் சிலர் இன்று பேட்டிகண்டு மாகாணப் புனரமைப்பு மசோதா காரண மாகச் சென்னையுடன் இணைய விருக்கும் கோயில்களின் எதிர் கால நிலையைப்பற்றித் தங்கள் கருத்துக்களை எடுத்துக்கூறினர்

திருவாங்கூரிலுள்ள கோயில் களையும் தற்போது சென்னையு டன் சேரவிருக்கும் திரு தமிழ கப் பகுதிகளிலுள்ள கோயில் களையும் ஒருசேரத் திருவாங் கூர் தேவஸ்வம்போர்டாரே நிரு வகித்து வர வேண்டுமென்றும் தேவஸ்வம்போர்டில் இரண்டு தொகுதிக் கோயில்களுக்கும் போதிய நிதித்வம் வழங்கப்பட வேண்டுமென்றும் இப்பிரதிநிதி கள் வற்புறுத்தினர். இந்த சகல கோயில்களின் நடைமுறைச் செலவுகளுக்கும் திரு கொச்சி அரசாங்கம் 51 லட்சம் ரூபாய் வழங்கிவருவதென்ற பொறுப்பு நீடிக்கவேண்டுமென்றும் இத் தொகையில் சென்னை எவ்வளவு கொடுக்க வேண்டுமென்பதும் கேரளம் எவ்வளவு கொடுக்க வேண்டுமென்பதும் நியாயமான முறையில் நிர்ணயிக்கப்பட்டு விடவேண்டுமென்றும் புதிதாக இதுபற்றிவரும் சட்டத்தில் சென்னைப்பகுதியில் இணையும் கோயில்களுக்குக் கொடுக்கப் படும் செலவுதொகைகள் விகிதா சாரத்திலிருக்குமென்ற உறுதி யளிக்கப்படவேண்டும் என்றும் அவர்கள் வேண்டிக்கொண்ட னர்.

இப்பிரதிநிதிகள் கூறியவைகளை வற்றைப்பற்றி ஆலோசிப்பதாக திரு பி எஸ் ராவ் வாக்குறுதி அளித்தார்.

## பண்டார நாயகா பதவி ஏற்கிறார்

கொழும்பு ஏப் 11-

தாம், நாளை உறுதிமொழி ஏற்று இலங்கைத் தலைமை அமைச்சர் பதவியை ஏற்கப் போவதாக மகாசன ஏக்சத் பெருமுனவின் தலைவர் திரு டி எஸ் டபிள்யூ ஆர் டி பண்டாரநாயகா இன்று பி டி ஐ நிருபரிடம் கூறினார்.

தலைமை அமைச்சர் தற்காப்பு அமைச்சர், வெளிநாட்டுஅமைச் சர் ஆகிய பதவிகளிலிருந்து

விலகிக்கொள்வதைத் தெரிவிக்கும் பதவி விலகல் கடிதத்தை சர்ஜான் கொத்தலவாலா சமர்ப்பித்துள்ளார் என்றும் இப்பதவி விலகல் இன்றிலிருந்து அமுலுக்கு வருகிறது என்றும் இன்று மாலை 4 30 மணிக்கு கவர்னர்-செனரல் மாளிகையிலிருந்து வெளியிடப்பட்ட அறிக்கை கூறுகிறது.

## தலைமை அமைச்சர்கள் விவரம்

இலங்கையில் ஐக்கிய தேசியக் கட்சி அமைத்த அரசாங்கங்களின் மூன்றாவது தலைமை அமைச்சராக சர் கொத்தலவாலா இருந்தார். இக்கட்சி அமைத்த அரசாங்கங்களின் முதல் தலைமை அமைச்சராக இருந்தவர் இக்கட்சியை அமைத்த திரு டி எஸ் சேனநாயகா ஆவார். இவருக்குப் பின்பு இவரது குமாரர் திரு டட்லி சேனநாயகா இப்பதவியை ஏற்றார். இவர் 1953ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பதவியிலிருந்து விலகிக் கொண்டார். அதற்குப்பின்பு சர் கொத்தலவாலா இப்பதவியை ஏற்றார்.

## கிறித்தவர் இந்துவானார்

மதுரை ஏப் 8

திருநெல்வேலித் தாலுகா ராசாவல்லியபுரம் கிராமம் ஓ. ஆறுமுகம் மகன் சாமுவேல் வில்லியம் என்ற கிறித்தவர், திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம் இளவரசு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாச்சாரிய சுவாமிகளிடம் இந்து முறைப்படி தீட்சை பெற்று இந்துவாகி ஏ. நடராசன் என்ற பெயரை இந்துப் பெயராகவும் பெற்றார்.

## கோடை கால விடுமுறை

மதுரை ஏப் 7.

மதுரை - இராமநாதபுரம் மாவட்ட சிவில் நீதிமன்றங்கள் கோடைகால விடுமுறைக்காக 23-4-56ம் தேதிமுதல் 13-6.56ம் தேதிவரை மூடப்படும்.

## வரப்பெற்றோம்

வள்ளுவர் ஆண்டு 1987-88 துன்முகி ஆண்டு வாக்கிய சைவப்பஞ்சாங்கம், டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்களால் கணிக்கப்பெற்றுத் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப் பெற்றது. விலை அணா நான்கு.

## உங்களுக்குத் தெரியுமா?

ஆஸ்திரேலியா, ஆப்கானிஸ்தான், பர்மா, இலங்கை, எகிப்து கோல்ட் கோஸ்ட் ஆகியவை உள்பட மொத்தம் 42 நாடுகள் இந்தியத் தையல் யந்திரங்களை இறக்குமதி செய்தன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் உப்புத் தொழிலின் அபிவிருத்திக்காக சுமார் 2 கோடி ரூபாய் செலவிட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில், இந்தியப் பொருள்கள் 63 சர்வதேசக் கண்காட்சிகளில் பார்வைக்கு வைக்கப்பட்டன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில், இந்தியாவில் உப்பு உற்பத்தி 850 லட்சம் மணங்கிலிருந்து 10 கோடி மணங்காகப் பெருக்கப்படும்.

இஸ்ஸாத் நகரிலுள்ள (உத்தரப்பிரதேசம்) ரயில்வே மராமத்துப் பட்டறை சுமார் 1.86 கோடி ரூபாய் செலவில் மாற்றியமைக்கப்படவிருக்கிறது.

இந்தியாவில் ஆண்டுதோறும் சுமார் 1.2 கோடி ரூபாய் மதிப்புள்ள 2,00,000 மணங்கு திராக்ஷை உற்பத்தியாகிறது.

இந்திய அமெரிக்க தொழில் நுட்பக் கூட்டுறவுத்திட்டத்தின் தொழில்துறை தொழில்நுட்பச் சேவைத் திட்டத்தின்கீழ் இந்திய வர்த்தக ஸ்தாபனங்களுக்கு இதுவரையில் மொத்தம் 18 தொழில்நுட்ப நிபுணர்களின் சேவைகள் கிடைத்திருக்கின்றன.

1947 மே மாதம் ஆரம்பிக்கப்பட்ட நிலக்கரிச் சுரங்கங்களின் பிராவிடென்ட் நிதித் திட்டத்தில் இப்பொழுது மொத்தம் சுமார் 3.2 லட்சம் சுரங்கத் தொழிலாளர்கள் அங்கத்தினர்களாக உள்ளனர். திட்டத்துக்கு 1956ம் வருஷம் பிப்ரவரி வரை கிடைத்துள்ள தொகை மொத்தம் 5.5 கோடிரூபாய்.

இந்தியாவில் பிரதி வருஷம் மொத்தம் சுமார் 8 கோடி ரூபாய் பெறுமான மதிப்புள்ள 950 லட்சம் ஜோடி செருப்புகள் உற்பத்தி செய்யப்படுவதாக மதிப்பிடப்படுகிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-28
துன்முகி-சித்திரை -14
26-4-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## நெய்தல்

பாங்கியிற் கூட்டத்துத் தலைவனது குறையை முடிப்பதற்கு உடன்பட்ட தோழி, மீண்டுவந்து தலைவியிடம் கூறியது.

நகையா கின்றே தோழி தகைய, வணிமலர் முண்டகத் தாய்பூங் கோதை, மணிமரு ளைம்பால் வண்டபடத் தைஇத், துணிநீர்ப் பௌவந் துணையோ டாடி, யொழுகுநுண் ணுசுப்பி னகன்ற வல்குற், றெளிதீங் கிளவி யாரை யோவென், னரிதுபுண ரின்னுயிர் வௌவிய நீயெனப், பூண்மலி நெடுந்தேர்ப் புரவி தாங்கித், தானப்ப ணங்குதலறியா னம்மிற், றுனணங் குற்றமை கூறிக் கானற், சுரும்பிமிர் சுடர்நுத னோக்கிப், பெருங்கடற் சேர்ப்பன் றொழுதுநின் றதுவே 245 :-அல்லங்கீரனார்

தோழீ! தகுதியையுடைய அழகிய மலர்கள் மிகுந்த கழிமுள்ளியினது நல்ல பூமாலையை நீலமணிபோன்ற கூந்தலில் வண்டுகள் சூழும்படி சூடித் தெளிந்த நீரையுடைய கடலிலே தோழியரோடு சென்று நீராடி நேரிய நுண்ணிய இடையையும் அகன்ற அல்குலையும் தெளிந்த இன்சொல்லையும் உடையையாய் எனது அரிதிற் பொருந்திய இன்னுயிரைக் கைக்கொண்ட நீதான் யாவளோ சொல்லாயென்று பூண்மலிந்த நெடிய தேரிலே பூட்டிய குதிரையோடு வந்து அவனால் நாம் வருந்துவதை அறியாதவனாய் நம்மால் அவன் வருந்துவதை மட்டும் சொல்லி, கழிச்சோலையில் வண்டுகள் ஒலிக்கின்ற நமது நெற்றியைப்பார்த்துப் பெரிய கடற்சேர்ப்பன் தொழுது நின்றதை எண்ணுந்தோறும் எனக்கு நகை உண்டாகின்றது.

பாலகவி

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

இசுலாம், கிறிஸ்தவம், சுத்த சன்மார்க்கசங்கம் முதலிய சமயப் பெயர்களில் கடவுள் இருக்கிறார், அவர் ஒருவரே என்று உண்மை புலனாகவில்லை. அப்பெயர்களைக் கேட்ட அளவில் அச்சமயங்கள் ஆத்திகமா? பல கடவுளரை வழிபடச் சொல்லுகின்றனவா? ஒரே தெய்வத்தை வழிபடச் சொல்லுகின்றனவா? என்ற சம்சயங்கள் எழுவது நிச்சயம். ஆகலின் தமக்கும் ஒரே தெய்வ வழிபாடுதான் உண்டென அவை அடிக்கடி தனிப்பட விளம்பரஞ்செய்தாக வேண்டும். ஆனல் சைவமென்ற சமயப் பெயரிலேயே சிவனொருவனே முழுமுதற் கடவுளென்ற பொருள் நன்கு தெரியக்கிடக்கிறது. 'தருபவ னொருவன்வேண்டும்' என்பதால் ஒருவனே தேவனென்பதையும், 'அந்தம் ஆதி' என்பதால் அத்தேவன் சிவனேயென்பதையும் அளவை முகத்தால் நிர்ணயம் பண்ணியுள்ளது சைவம். அச்சமயம் பரவியிருக்கும் பிரதேசத்தில் வேற்றுச் சமயங்களின் ஏகதேவக் கொள்கையைக் கொண்டுவந்து விளம்பரஞ் செய்கிறநவீனர் சொல்லன் தெருவில் ஊசி விற்கிறவரே யாவார். ஒருவனே தேவனென்ற தொடரே திருமுறையிற் கண்டது. அதன் பொருளும் சிவனே பரம் என்பதுதான்.

'சமயத் தலைவர்கள்......இவ்வழியை...காட்டுவதற்கு முற்பட்டார்கள். அவர்களுடைய முயற்சியே சமயம் என்ற பெயர் பெற்றது'; 'இத்தகைய மெய்ஞ்ஞானப் பாரவான்க...ளுடைய கருத்துக்களே அவ்வச் சமயத்தின் கொள்கைகளாக வகுக்கப்பட்டன', 'வெவ்வேறு சமயத் தலைவர்களோடு தொடர்பு கொண்டவர்கள் வெவ்லேறுசமுகத்தினராகத் தனித்தியங்கி வாழத்தொடங்கினார்கள்' (28-12-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். அம்மூன்றும் சமயம் என்றால் என்ன? சமயக் கொள்கைகளென்பன யாவை? ஒவ்வொரு சமயத் தலைவரோடுந்தொடர்பு கொண்டவர் எவ்வாறு வாழத் தொடங்கினர்?

என்ற வினாக்களுக்கு விடை போலிருக்கின்றன. அச்சமூகப்பிரிவுகள் நவீனருக்குப் பிடிக்கவில்லை. அதனால் 'அவ்வச்சமயத்தின் கொள்கைகள்....அடிப்படையில் உடன்பாடாயிருந்தும்' (28-12-55 தமிழ்நாடு) ஒவ்வொரு சமயத்தினரும் வெவ்வேறு சமூகத்தினராய்த் தனித்தியங்கி வாழவேண்டுமா? என அவர் கேட்கிறார். சம்பந்தர் கொள்கையும், அப்பர்கொள்கையும் அடிப்படையில் உடன்பாடே. அதில் வேறுபாட்டுக் கொள்கையின் கலப்புச் சிறிதுமில்லை. ஆகலின் சம்பந்தரோடு தொடர்புகொண்ட அடியார்களும், அப்பரோடு தொடர்பு கொண்ட அடியார்களும் வேறு வேறு சமூகத்தினராய்த் தனித்தியங்க வில்லை. பேயாழ்வார் கொள்கையிலும், பூதத்தாழ்வார் கொள்கையிலும் அதுவே உண்மை. ஆனால் சம்பந்தர் கொள்கையும். பேயார் கொள்கையும் அடிப்படையில் உடன்பாடா? ஆம், அவ்வடியார்கள் சைவராகவும், அவ்வாழ்வாரின் தாசர்கள் வைணவரா்கவும்வேறு வேறு சமூகத்தினராய்த் தனித்தியங்க வேண்டாம் என்கிறார் நவீனர் ஆனால் அவ்வடிப்படைக் கொள்கை சைவத்தில் வைணவத்திற்கு வேறுபட்ட கொள்கைகள் சிலவற்றோடும், வைணவத்தில் சைவத்திற்கு வேறுபட்ட கொள்கைகள் சிலவற்றோடுங் கலந்தேயிருக்கிறது. அவ்வேறுபட்ட கொள்கைகளை வகுத்தவரும் அவ்வச்சமயத் தலைவராகிய மெய்ஞ்ஞானப் பாரவான்களே. இனி, அவ்வுடன்பாட்டுக் கொள்கை, வேறுபாட்டுக்கொள்கை யாயவற்றுள் வலியுடையது எது? வேறுபாட்டுக் கொள்கையே யில்லையானால்மாத்திரம் உடன்பாட்டுக் கொள்கை வலியுடையதா யிருக்கும், வேறுபாட்டுக் கொள்கையின் சம்பந்தம் இருந்திடுமானால் உடன்பாட்டுக் கொள்கையின் வலி யடங்கியேவிடும். வேறுபாட்டுக்கொள்கை வலி மேற்பட்டு நிற்கும். அதை அதிக்கிரமிக்க உடன்பாட்டுக் கொள்கையால் முடியாது. வேறுபாட்டுக் கொள்கையை யனுசரித்தே உடன்பாட்டுக்கொள்கை பயன் தரவும் வல்லது. வேறுபாட்டுக் கொள்கை சார்ந்த உடன்பாட்டுக் கொள்கையை அவ்வேறுபாட்டுக் கொள்கையிலிருந்து பிரித்தெடுத்து அதைக்கொண்டு சமயங்களின் சமூகத்தினரை யொன்றுபடுத்த முயல்வது போதுபோக்கே யாம். பாரத தேசத்துக்கு நலஞ்செய்த லென்பது அரசியற்கட்சிகளனைத்திற்

கும் உடன்பாட்டுக் கொள்கை. ஆனால் காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கருப்புச்சட்டை முதலிய கட்சிகளுக்குத் தனித்தனிக் கொள்கைகளு முள. அவை கட்சி தோறும் வேறுபட்டன. அவ்வுடன்பாட்டுக் கொள்கை நிதரிசனமு மானது. அதைப் பிரித்தெடுத்துப் பிரசாரஞ் செய்து அக் கட்சிகளை யொன்றுபடுத்த அரசியல் மேதைகளால் முடிகிறதா? சமயத்துறையில் அவ்வுடன்பாட்டுக்கொள்கை கண்ணுக்குத் தெரியாதது. அதை யெடுத்துப் பிரசங்கித்துச் சமயங்களை யொன்ருக்க எப்படி முடியும்? 'தி-க, தி-மு-க வைச் சேர்ந்தவர்க...ளுக்கு....கடவுள் வழிபாட்டில், கடவுளிடத்து நம்பிக்கை வந்தது குறித்து மகிழ்ச்சி ஏற்பட்டுள்ளது' என நவீனர் சொன்னது முன் காட்டப்பட்டது. அந்நம்பிக்கைஉண்மையே யாகுக. அதுவேபற்றி அத் தி-க, தி-மு-க வைச் சேர்ந்தவரும் சைவரும் அளவளாவலாம் போலும். உடன்பாட்டுக் கொள்கையை மாத்திரம் பிரித்தெடுத்துப் பேசித்திரிவது ஒவ்வொரு சமயத்துச் சமுகமும் தன் சமயத்திற் கொண்ட பற்றைச் சிறிதுசிறிதாக விடுத்து நாத்திகப் படுகுழியிற்போய்விழுமாறு செய்யுமென்பது நிச்சயம். ஆகலினன்றே 'ஐக்கிய மடைவதற்காக மதங்களையெல்லாம் ஒன்ருக்க முயல்வது வீணுகும். ஒரே மாதிரியான கடவுள் வழிபாட்டையும் மற்றப் புறச் செயல்களையும் கட்டாயப்படுத்துவதும் நல்லதல்ல' (14-6-55 தினமணி) என நவீனருக்கு அறிவு கொளுத்துவதுபோலக் கூறினர் அரசியல் மேதை யெனப்படும் ராஜாஜி.

'சமயங்களிடையே யுள்ள வேறுபாடுகளை வற்புறுத்தாமல் அவற்றின் பொதுவானஉண்மைகளை மட்டும் வலியுறுத்த வேண்டும் என்றுஅவர்(இராமலிங்கர்) கூறியிருக்கிருர்' (28-12-55 தமிழ்நாடு) என்கிருர் நவீனர். வேறுபாட்டுக் கொள்கைகளின் இன்றியமையாமையையும், பயப்பாட்டையும் அவர் உணர்கிலர். இராமலிங்கரும் அன்னரே. பொதுவான உண்மைகள் என நவீனர் சொன்னவைதான் இராமலிங்கர் விரித்த கடைச் சரக்குப் போலும். ஆயின் 'கடையை விரித்தேன்; கொள்வாரில்லை; ஆகையால் கட்டிவிட்டேன்' (28-12-55 தமிழ்நாடு) என அவர் கூறி வருந்தியது சரி, அவரின் நேர்பிடரானேர்க்கு மேற் காட்டிய காரணங்களால் அச்சரக்கை ஏற்கச் சம்மத

மிருந்திராது. மேலும் அச்சீடன்மார் தம் ஆசிரியரோடு நெருங்கிப் பழகியவராகலின் அவருடைய வாழ்வு வகைகளையுந் தெரிந்தவரா யிருப்பர். ஆகையாற்றான் அவர் அவ்வாசிரியரின்வழி யொழுகாமல் 'சீடர்கள் அவர்களைத் தமக்குத் துணையாகத்தான் கொண்டார்கள்' (29.10-55 தமிழ்நாடு) என்று நவீனரே சொன்னபடி அவ்வாசிரியரைத் தம் இலௌகிக காரியசித்திக்குப் பயன்படுத்திக் கொண்டன ரெனத் தெரிகிறது. 'இசுலாமியச் சமயத்திற்கும், இந்து மதக் கோட்பாடுகளுக்கும் பலதுறைகளில் உடன்பாடு உண்டு' (29-10-55 தமிழ்நாடு) என ஆசையாற் சொல்லி நபியையும் இராமலிங்கரையுஞ் சமப்படுத்தப் பார்க்கிறார் நவீனர். நபியின் காலத்தில் அவருக்கு நேர்சீடரானார் பலர். அவருள் ஒருவராவது அந்நபிக்குச் சூதுசெய்தாரென என்னாற் சொல்ல முடியவில்லை. செய்தாரிருந்தாலும் மிகச் சிலராய்த்தா னிருப்பர். சம்பந்தாதியோர் காலத்தில் அவ்வாசிரியன்மாருக்கு நேர்சீடராகி அவரோடு தலயாத்திரை செய்த அடியார் பல்லாயிரவர், அவருள் ஒருவராவது அவ்வாசிரியன்மாரை வஞ்சித் தொழுகிலர். அவரனைவரும் அம்மெஞ்ஞானப் பாரவான்களைத் தம் குலதெய்வமெனக் கொண்டு போற்றவே செய்தனர். ஆனால் இராமலிங்கருக்கு நேர்சீடரானா ரனைவருமே அவரிடம் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி யொழுகினர். அதனைத் 'தீக்குணத்தார் யாவரும் சீடரெனி னென்னுடைய, தீக்குணத்தி னெல்லையெவர் தேர்கிற்பார்-ஊக்கமிகு, நல்லோர்க் களிக்கு நதிச்சடையோ யெற்கருளி, னெல்லோர்க்கு மையுறவாமே' என இராமலிங்கரே பாடி யிரங்கினார். அதிலுள்ள 'யாவரும்' என்ற சொல்லை நோக்குக. நபிக்கும், அவருக்கும் உடன்பாடெங்கிருக்கிறது? சம்பந்தாதியோர் பிரபாவமோ நிகரற்றது. 'பின்னர், உலகம் அவரை (இராமலிங்கரை)த் தெய்வமாகக் கொண்டாடத்தொடங்கிற்று. (தொடரும்)

## மதமாற்றம்

அம்பை ஏப் 20

வடக்கன்குளத்தில் சென்ற10 நாட்களில் 225 கிறித்தவர்கள் இந்துக்களாக மதம் மாறியிருக்கின்றனர்.

---

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு


# செட்டிநாடு

துன்முகி சித்திரை-14


## முதலமைச்சரின் முறையற்ற பேச்சு

கராச்சியிலுள்ள காளிகோயிலி லிருந்து சில நகைகள்களவுபோய் விட்டபடியால், அதுபற்றிய பேச்சு லோகசபையில் அணிமையில் வந்தது. அப்போது நமது இந்தியப் பேரரசின்முதலமைச்சர் நேருஜி 'கடவுளுக்கு நகைகள் அவசிய மில்லை. ஒருவர் சொத்தை மற்றொருவர் கொள்ளையிடக்கூடா தென்பது நியாயமானாலும் அது வேறு விஷயம். சுவாமியினுடைய நகைகளையெல்லாம் கடலில் எறிந்து விடுவதே மேல்' என்று சொல்லியிருக்கிறார்-

பீகார் பஞ்சாயத்துக் கூட்டமைப்பு மாநாட்டின் தொடக்க விழாச் சொற்பொழிவை ஆற்றிய பொழுது நேருஜீ 'செபமாலையை உருட்டுவதாலோ, மந்திரங்களைஓது வதாலோ, சோதிடர்களின் உதவி யாலோ வறுமையையும் வேலையில் லாத் திண்டாட்டத்தையும் போக்கி விட முடியாது' என்று கூறியுள் ளார்.

இந்த இரண்டிடத்துப் பேச்சுக் களையும் கேட்ட அல்லது அறிந்த எந்த இந்தியநாட்டவனும் அவரது நேர்மையற்ற கருத்துக்கு வருந்தா மலிருக்க முடியாது. ஆன்மீக வளர்ச்சியின்அடிப்படையேஇன்ன தென்றறியாதஉலகமக்களால்மதிக்

கப் பெறுகின்ற நேருஜீ, ஆன்மீகப் பயனை உச்சநிலையில் அடைந்து வருகிற இந்தியநாட்டிற் பிறந்தவராயிருந்தும், இந்நாட்டிற்கே சிறப்பளித்து வருவதாகிய தெய்வீக உண்மையை அறியாது இடையிடையே இவ்வாறு அவருக்கு ஏதுந் தெரியாதபொருள்கள்பற்றிப் பேசமுற்பட்டுவிடுவதுஆபத்துவிளைவிக்கக்கூடிய ஒன்ருகும்.

கோயில்,வழிபாடு முதலியன வற்றை ஒழித்துக்கட்ட வேண்டுமென்று கங்கணங்கட்டிக்கொண்டு திரிகின்ற புறப்பகைவர்களால்வருகின்ற தீங்கைக்கண்டு ஆத்திகர்கள் மனம் நொந்துகொண்டிருக்கின்ற இந்த வேளையில் புத்தருக்குவிழாக் கொண்டாட மதச்சார்பற்ற அரசாங்கப்பொருளையும் பொழுதையும் செலவிடமுன்வந்த நமது தலைமை அமைச்சர் கோயில்நகைகளைக் கடலில் எறிந்துவிடும்படி உபதேசம் செய்கிருர். இந்துக் கடவுளாயிருக்கிற காளிதேவியின்நகைகளுக்குத் தான்இந்தஉபதேசமேதவிர ஏனைய சமயக் கடவுளர் நகைகளைப்பற்றியோசொத்தைப்பற்றியோஎதும்பேச்சில்லை. ஏழை இந்தியாவில்நகைகளைக் கடலிலெறிந்துகடவுள்பேரில் தமக்குள்ள வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளத் தலைமைஅமைச்சர் எண்ணினுர்போலும்!

சேபமாலை உருட்டுவதிலும், மந்திரங்களை ஓதுவதிலும், சோதிடர் உதவியிலும் எந்த எந்தக் காரியங்களின் வெற்றியை எதிர்பார்த்துஇதுவரை நேருஜீ ஏமாந்திருக்கிருரென்று நமக்குத் தெரியவில்லை. காந்திஜீயின் சீடராளுலும்கடவுள் எண்ணமே இல்லாது இதுவரை காலத்தைக் கழித்துவிட்ட நேருஜீ, அவருக்கு அனுபவமில்லாத சேபமாலை, மந்திரம், சோதிடம் ஆகியவைபற்றிப் பேசமுற்படுவது,எவ்வளவு ஆச்சரியமாயிருக்கிறது.

சேபமாலையும், மந்திரமும்,சோதிடமும் இல்லாத நேருஜீயின் அரசாங்கம்ஏறக்குறையப்பத்தாண்டுகளாகப் பொதுமக்களின் வறுமையைப்போக்க எடுத்துக் கொண்ட முயற்சிகளில் என்ன பயன்கிடைத்திருக்கிறதென்பதைப்பொதுமக்கள் அறிவார்கள்- அதிகாரத் தலைமை பெற்றிருக்கும் அவர், எதையும் ஆராய்ந்து பேசுவது நல்லதென்பது நமது கருத்து.




காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைக் கல்விக்கூடத் தலைமைத் தமிழாசிரியர் திரு வீ திருஞானசம்பந்த முதலியாரவர்கள் செல்வி இராசேசுவரிக்கும் பெருநகர் நிலக்கிழார் திரு. த சு நடேசமுதலியார் செல்வன் சுப்பராயனுக்கும் 23-4-56ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

காரைக்குடி திரு. ராம ப மெ சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் குமாரர் மெய்யப்பசெட்டியார் செல்வி சீதைக்கும் திரு, சா ந சா மெ சா அழகப்பசெட்டியாரவர்கள் செல்வன் சாத்தப்பனுக்கும் 23-4-56ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

மணமக்கள் மக்களோடு மகிழ்ந்து மனையறங்காத்து நெடிது வாழ ஆண்டவனை வேண்டுகிறோம்.

## குடிபுகும் விழா

தமிழ் வள்ளல் மெய்யப்ப செட்டியாரவர்களின் சிவபூசா நிலையப் புதுமனைபுகும் விழா 23-4-56ல் நடைபெற்றது. காலையில் புண்ணியாவாசனம் நிகழ்ந்த பிறகு, சைவசித்தாந்த சரப ஈசானசிவாசாரிய சுவாமிகளும் அவர்கள் சீடர் பதின்மரும் சிவ பூசை புரிந்தார்கள். பகல் ஒன்றரைமணி அளவில் குடிபுகும் விழாநிகழ்ந்தது. பல அன்பர்கள் வந்து சிறப்பித்தார்கள்.

## திருக்காருயில்

ஸ்ரீகைலாசநாயகி அம்பாள் சமேத கண்ணாயிரநாத சுவாமிக்கும் ஆதிவிடங்கத் தியாகராஜ சுவாமிக்கும் 2-5-56முதல் 25-5-56 வரை பிரமோற்சவம் நடைபெறும். 14உ சங்காபிஷேகம் 18உ ரிஷபவாகனம்20உ திருத்தேர் 22உ பக்த காட்சி 23உ தீர்த்தவாரி 15உ முதல் 19உவரை பேரறிஞர்களின் சமயவிரிவுரைகள் நிகழும்.

## தங்கம், வெள்ளி

மதுரை ஏப் 25

| | | |
|---|---|---|
| பாட்லா | 106 4 0 | |
| சவரன் | 67 8 0 | |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 0 0 | |
| வெள்ளி 100தோலா | 184 0 0 | |
| வெள்ளி 1தோலா | 1 14 0 | |

# ஊடல் நெஞ்சம்

(மு. சிங்காரம்)

நெஞ்சையள்ளும் கொஞ்சு தமிழ்க் காவியங்கள் அனைத்தும் நினைத்தாலே சிலிர்க்கச் செய்யும் பான்மையன. அவற்றுள் நீதிநூலாம் திருக்குறள் பீடும் பெருமையும் பெற்றிலங்கும் பெரியோர்க்குப் பெருவிருந்தும், சிறியோர்க்கு அறிவுவிளக்கமும் அளிக்கும் தன்மையது. அன்பு உள்ளத்தின்கண் நிகழும் இன்ப உணர்வு அன்பின் அடித்தளம் இல்வாழ்வே. அந்த அன்பு மனைவியிடத்துக் காதலாகமிளிர்கிறது. அத்தகைய அன்பில்லாவிட்டால் இல்லத்தில் இன்பம் ஏது? இது தத்துவம். இத்தத்துவத்தை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவர் அறிந்திருக்கிறார். தான் அறிந்த உண்மையைப் பரப்ப எண்ணிக் குறள் என்னும் பெருநூல் செய்து உலகுக் களித்துள்ளார்.

வள்ளுவர், வாழ்க்கையில் நடக்கும் சம்பவங்களையே குறள்களாகத் தந்துள்ளார். தலைவன், தலைவியர் அக்காலத்து எங்ஙனம் வாழ்ந்தார்கள் என்பதை இக்கால மக்கள் அறியும் சாதனமாக விளங்குகிறது வள்ளுவரின் இன்பத்துப்பால். ஊடல் பற்றிக் கூறவந்த வள்ளுவர் 'ஊடுதல் காமத்திற்குஇன்பம் அதற்கின்பம்கூடிமுயங்கப்பெறின்' என்றார் இதே கருத்தனையப் பண்டைச் சான்றோர் அளவுக்கு மிஞ்சினல் அமிர்தமும் விடம் என்றார்கள். ஊடல் அளவுக்கு மீறவும் கூடாது என்பதற்கு வள்ளுவர் காட்டும் உவமையின் பொருள் மேலே கூறிய பழமொழியேயாகும். உப்பு, உணவில் அளவோடு அமைந்திருப்பதைப் போன்றது ஊடல், ஊடலை அளவுகடந்து நீட்டிக்தல், அந்த உப்பு சிறிதளவு மிகுதியாக இருப்பதைப் போன்றது என்கிறார்.

'உப்பமைந்தற்றால் புலவி அது சிறிது, மிக்கற்றால் நீளவிடல்' (புலவி-ஊடல்) பேனுர் வள்ளுவர், தலைவியர் காணும் ஊடல்

நுணுக்கங்களைக் கூறும் போது, 'யாரினும்காதலம்என்றேனாஊடி னாள்,யாரினும் யாரினும்என்று'' அதாவது அந்திமயங்கும் நேரம் பூரண நிலவு பொழிக்கண் வீசு கிறது. தலைவனும் தலைவியும் சந்திக்கின்றனர். மனம்விட்டு அவர்களது உணர்வைப் பங்கிட்டுக் கொள்கின்றனர். அவ் வமயம் தலைவன் உணர்ச்சி வசப்பட்டு 'யாரையும்விட நாம் மிகக் காதல் கொண்டிருக்கிறோம்! என்று கூறுகிறான். தலைவி யாரைவிட? யாரைவிட? என்று கேட்டு ஊடல் கொண்டாள். தலைவன் அவளைச் சமாதானம் செய்ய இப் பிறப்பில் நாம் பிரியமாட்டோம் என்று சொல்கிறான். இது கேட்ட தலைவி இனிவரும் பிறப் பில் என்னைப் பிரிவாரோஎன்று நினைந்து ஊடல் கொள்கிறாள்.

'இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக், கண்ணிறைநீர் கொண்டனள்' இவ் விரமாகக் காதலர் ஒவ்வோர்வார்த்தையி லும் தவறு கண்டு ஊடல் கொண்டு பின்னர்த்தழுவி மகிழ் வதில் இன் பங்கண்டிருக்கிறார் கள்.

இங்ஙனம் தலைவியர் கொள் ளும் ஊடலைப் புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை என மூன்று அதிகாரங்களில்மொழிந் துள்ளார் வள்ளுவப்பெருந்தகை

---

## உங்களுக்குத் தெரியுமா?

மத்திய சர்க்காரின் கலங்கரை விளக்க இலாகா 1955-56ம் ஆண்டில் மொத்தம் 22 லட்ச ரூபாய் செலவு மதிப்பில்புதிதாக 5 கலங்கரை விளக்கங்களை அமைத்தது; சுமார் 2லட்ச ரூபாய் செலவு மதிப்பில்எட்டுக் கலங்கரை விளக்கங்கள்சீரமைக் கப்பட்டன.

வெளிநாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள இந்தியக் கப்பல் போக்குவரத்து கம்பெனிக ளூ சகுச் சரச்குபிரயாணிகட்ட ணங்கள்மூலம் 1953-54 ஆண் டில் மொத்தம் 8.59 கோடி ரூபாய் வருமானமாகக் கிடைத் தது. 1954-55ம் ஆண்டில் அவ் வகையில் கிடைத்த வருமானம் மொத்தம் 10.47 கோடி ரூபாய் ஆகும்.

---

## இந்தியாவில் சமூகக் கலை

கணவன் மனைவியர் இருவரும் ஒரே வேலை செய்வது அருமை. இருவரும் ஒரே நிலையத்தில் கற்பிப்பதும், ஒரே விதமான திட்டங்களில் கலந்து கொள்வதும் அதனினும் அருமை. சமூகக்கலை கற்பிக்கும் கிளிக் தம்பதிகள் அத்தகைய கணவன் மனைவியர்.

அவர்கள் புல்பிரைட் தர்மஸ்தாபனத்து உதவிபெற்ற விரிவுரையாளர்களாக இப்பொழுது இந்தியாவில் இருக்கிறார்கள். கிளாரன்ஸ் ஈ கிளிக் தாம் இருபது ஆண்டுகள் படித்துக் கொடுத்துள்ள ஹொனலுலுவிலுள்ள ஹாவாய் சர்வகலாசாலையினின்று ஒரு வருஷ விடுமுறையில் இங்குவந்திருக்கிறார். கிளிக் தம்பதிகளோடு பத்து வயதுக்கும் இருபதுவயதுக்கும்இடைப்பட்ட அவர்களுடைய பிள்ளைகள் வந்துள்ளார்கள்.

ஸ்ரீ கிளிக்கும் ஸ்ரீமதி கிளிக்கும் ஹாவாயில் சமூகக்கலை கற்பிக்கிறார்கள். இந்தியாவிலும் அதே வேலை செய்கிறார்கள், சமூகக்கலை கற்பிப்பதற்கு இடையில் அவர்கள் இந்தியாவுக்கும் ஹாவாய்க்கும் உள்ள ஒற்றுமைகளை உளங்கவரும் முறையில் ஆராய்கிறார்கள்.

ஹாவாயை ஒரு பகுதியாகக் கொண்ட பாலினீஷியாவைச் சித்தரித்துள்ள பால் காகுயின் என்பார் இந்தியாவின் தென்மேற்குக் கடற்கரைக்கு வந்திருந்தால் வேறுவிதமாகச் சித்தரிக்கமாட்டார் என்று அவர்கள் கருதுகிறார்கள்.

1955 ஜூன் மாதம் வந்து சேர்ந்ததும் தென் இந்தியாவில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அவர்கள் முதலில் படித்துக்கொடுத்தார்கள். அங்கு அவர்கள் சமூக இயல், சமூக ஆராய்ச்சி, சமூக மனோதத்துவம், கல்வியின் சமூக இயல்கள் ஆகியவை பற்றி விரிவுரைகள் நிகழ்த்தினார்கள். அதன் பின் 1956 மார்ச் முடிய சென்னையிலுள்ள சமூக வேலைப்பாடசாலையில் அதே விரிவுரைகள் செய்தார்கள்.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-29
துன்முகி-சித்திரை - 21
3-5-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## பாலை

தலைவன் பிரிவால் வேறுபட்டு மெலிந்த நலைவியைநோக்கி மேகம் இரங்குவதனால் அவர் வருவேனென்ற பருவம் இதுவேயெனத் தோழி வலியுறுத்திக்கூறியது.

இடூஉ வூங்க ணினிய படூஉ, நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கிற் றேற்று, மனைமர நொச்சி மீமிசை மாச்சினை, வினைமா ணிருங்குயில் பயிற்றலும் பயிற்று, முரம்புரி யுள்ளமொடு சுரம்பல நீந்திச், செம்பொருட் ககன்றன ராயினும் பொய்யலர், வருவர் வாழி தோழி புறவிற், பொன்வீக் கொன் -றையொடு பிடவுத்தளை யவிழ, வின்னிசை வான மிரங்குமவர், வருது மென்ற பருவமோ விதுவே 246 :-காப்பியஞ் சேந்தனார்

தோழி! வாழி, நமது கருத்துக்கிடையே இனிய நிமித்தம்உண்டாகின்றது. நெடிய சுவர்ப்பல்லி நம்பக்கத்திலிருந்து தேற்றுகின்றது. மனையிலேயுள்ள பெரிய நொச்சிவேலியி லுயர்ந்த மரமாத்தின் கிளையிலேயிருந்து கூவுந் தொழிலிலே கைபோய கரியகுயில் கூவுதலைச்செய்கின்றது. வலிமைமிக்க உள்ளத்தோடு பல சுரங்களைக் கடந்து தலைவர் பொருளீட்டச் சென்றாராயினும் பொய்யாது வந்துவிடுவார். கானத்துப் பொன்போலும் மலரையுடைய கொன்றையுடனே பிடாமலரும் அலர இனிய குரலையுடைய மேகம் முழங்குதலால் அவர் வருவேமென்ற பருவம்இதுவேயாகும்.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக் கவின்றகல் லாடைமேற் புனைந்துயாமெலாம் வழுத்துந் துறவியென் றிருந்து மொருத்திதன் னிள முலைச்சுவடு, தோமுறக் கொண்டா ரெனச்சிறை யிடல்போற் சுடர் மனக் குகையுளே கம்பத்தோமொழிப் பொருளை யடக்கியா னந்த முறுநர்வா ழிடம்பல வுளவால் :காஞ்சிப்புராணம் 281

உரை:- 'காமனை-அழகுடைய வனுகிய மன்மதனை, முனிந்து-சினந்து எரித்து, நெடுஞ்சடை-நீண்ட சடையை, தரித்து-முடித்து, கவின்ற-உயர்வு பொருந்திய, கல்லாடை-துவரா டையை, மேற்புனைந்து-மேலே அணிந்து, யாமெலாம்-நாமனைவரும், வழுத்தும்-போற்றித் துதிக்கின்ற, துறவியென்று இருந்தும்-துறவு மூர்த்தியாக இருந்தும், ஒருத்திதன்-ஒப்பற்றவளாகிய காமாட்சியம்மையினது, இளமுலைச் சுவடு-இளமையாகிய கொங்கைத்தழும்பை, தோம் உற-குற்றம்பொருந்தும் படி, கொண்டார்-தமது திருமேனியிலே கொண்டுவிட்டார், என-என்று, சிறையிடல்போல்-சிறையிலே இடுதல்போல, சுடர்-ஒளிபொருந்திய, மனக்குகையுள்-மனமாகிய குகையினுள்ளே ஏகம்பத்து ஓம்மொழிப் பொருளை-திருவேகம்பத்திலே எழுந்தருளியிருக்கின்ற பிரணவப் பொருளாகிய பெருமானை, அடக்கி-உட்படுத்தி, ஆனந்தம் உறுநர்-சிவானந்தத்தை நுகர்ந்து கொண்டிருப்பவர்கள், வாழ்-வாழுகின்ற, இடம்பல-இடங்கள் பல, உள-உள்ளன' என்பதாகும்.

திராவிடமாபாடியகர்த்தராகிய சிவஞான சுவாமிகள் அருளிச்செய்தது காஞ்சிப்புராணம். இது 2742 செய்யுட்களைக் கொண்டது. காஞ்சித்திருத்தலத்தின் பெருமை கூறுதலை முன்னிலைப் பொருளாகக்கொண்டே

ழுந்த இப்புராணத்தை ஒரு சித்தாந்த சாத்திரமென்று சொல்லுவது, பெரிதும் பொருந்தும்.

தமிழிலேயுள்ள இலக்கியங்களை உலகியல் பற்றியனவும் இறையியல் பற்றியனவுமென இரண்டு பெரும் பிரிவுகளில் அடக்கலாம். உலகியல் பற்றிய இலக்கியங்களில் ஓரோவழி இறையியலும், இறையியல் பற்றிய இலக்கியங்களில் ஓரோவழி உலகியலும் பேசப்பெற்றே இருக்கும். எனவே, உலகியலிலக்கியங்கள் இறையியலிலக்கியங்களைக் கற்பதற்குக் கருவி நூல்களாக அமைந்துள்ளன வென்பது அறியத்தக்கதாம்.

இலக்கியங்கள் அனைத்தும் கற்பவர்களின் பயன்கருதி ஆன்றோர்களால் ஆக்கப்பெற்றன. ஆகவே, உலகியலை நிறுவுதற்பொருட்டு எழுந்த இலக்கியங்களைவிட இறையியலை நிறுவுவது குறித்து எழுந்த இலக்கியங்கள் பெரும்பயனைத் தருவனவாகும். 'உள்ளோன் தலைவனாக உள்ளது கூறல், உள்ளோன் தலைவனாக இல்லது கூறல், இல்லோன் தலைவனாக உள்ளது கூறல், இல்லோன் தலைவனாக இல்லது கூறல்' என இலக்கிய வகைகள் நான்கென அறிகின்றோம்.

இவற்றுள் இரண்டாவது நான்காவதுமான வகைகளை சேர்ந்தவை, இல்லது கூறுவ வாயினும், அவற்றால் உண்ட கும் பயனைக்கருதி அவற்றையு உள்ளதுகூறும் இலக்கியங் ளோடு ஒப்பவைத்துப் பாராட் வர் உயர்ந்தோர். நூல்க உள்ள வரலாற்றுப் பகுதியு நுழைந்து, அவை தமது அ வுக்கு முரண்பட்டனவாக தோன்றும் செய்திகளையுடை மையால் பொய்யானவை என்று சாதிப்பார் மிகுந்த நாளில் புராண இலக்கியங்களி உண்மையை ஆராய்வதைவி அவற்றின் பயனை ஆராய்வ மிகவும் ஏற்றதாகும்.

அந்தமுறையில் ஆசிரியர் ஞானசுவாமிகள் தமிழ் நல சைவநலமுமாகிய இரண்டு ெ நலங்களும் அமைய யாத்து கிய காஞ்சிப் புராணத் நாமடைகின்ற பயன் மிகவுய தென்பது உளங்கொள்ளத் தாகும். இப்புராணம் வடெ யிலிருந்து மொழிபெயா பெற்றதென்று ஆசிரியர் யுள்ளார். நாட்டுப்படல இந்நூலைத் தொடங்கியஆ இடையிற் பலபடலங் தலப்பெருமையைத் தெ

றுத்தி இறுதியில் சிவ புண்ணியப்படலத்தை வைத்து முடித்த தன் உட்கிடை அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

உலகியலறம் பிறழாது நாட்டிலே வாழும் மக்கள் சிவபுண்ணியப் பேற்றை அடைதலே முடிந்த பயனாகும் என்பது இப்புராணத்தால் அறியத்தக்க பொதுப் பொருளாகும். வேதங்களின் முடிபாக விளங்குகின்ற உபநிடதங்களிலும், அவற்றிற்கு முடிபாயமைந்த சிவாகமங்களிலும் சைவத் தெய்வத் திருமுறைகளிலும் முறையாகப் பயின்ற பயிற்சியின் பயனாக ஆசிரியர் இப்புராணத்தை நமக்கு வழங்கியிருக்கின்றாராதலின், இவ்வொருநூலை உளங்கொண்டு படித்துணர்வதால்முன்சொன்ன பலநூல்களையும் படிப்பதால்உண்டாகும் பயனை எளிமையிலும் விரைவிலும் நாம் பெறமுடியுமென்பதற்கு ஏதும் ஐயமில்லை.

மிக மேலான சைவசித்தாந்த உண்மைகளைச் சாமானியமான உவமைகளில் வைத்து விளக்குகின்ற ஆற்றல், இவ்வாசிரியரொருவருக்கே சிறப்பாயமைந்திருப்பதாகும். நாடு நகரப்படலங்களில் உள்ள பாடல்கள் பலவற்றில் சாத்திர நுட்பங்கள் பல, மிகமிக எளிமையாக விளக்கப்பெற்றுள்ளன.

நகரப்படலம், 126 பாடல்களைக் கொண்டிருக்கின்றது. முதலைந்து பாடல்களில் நகரத்தின் சிறப்பு, பொதுநிலையிற் பேசப்பெற்றுள்ளது. 'தமது நகரத்தைச் சிறந்ததென்று கருதியிருந்த வானவர்கள் காஞ்சிநகரத்தைக் கண்டபிறகு, முன்னர்த் தாங்கொண்டிருந்த கருத்தின் பிழைபாட்டை நினைந்து வருந்துவரென்று சொல்லி அது 'முன்னொரு சமயந் தன்னைப் பொருளென முற்றி நின்றோர், பின்னர்வான் சைவ மெய்தப் பெறினவர் பேசுமா போ'ன்றதென்று சைவச்சிறப்பை நிலைநாட்டுகின்ற ஆசிரியரது சதுரப்பாடு பெரிதும் போற்றிப் பாராட்டுதற்குரியதாகும்.

முன்னர்ப் பொதுவாக நகர்ச்சிறப்பைப் பேசிய ஆசிரியர் அடுத்தபடியாகப் புறநகர் இடைநகர் அகநகர் என மூன்று பிரிவுகளை வகுத்துக்கொண்டு புறநகரில் சோலை, யானைக்கூடம், குதிரைப்பந்தி, தேர்நிலை, வீரரிருக்கை, தொழில்செய்வோரிருக்கை ஆகியவற்றைக்கூறி இடைநகரில் அகழி மதில் ஆகியவற்றைச் சொல்லி அகநகரில்

பரத்தையர்வீதி, கடை வீதி, மற்றையவீதி, மாளிகை, வேள்விச்சாலை, அந்தணரிருக்கை, அரசரிருக்கை, வணிகரிருக்கை, வேளாளரிருக்கை, மற்றையோரிருக்கை, கழகம், சைவமடம், திருக்கோயில், திருமதில், திருக்கோபுரம், கொடி, தூபி, மண்டபம், வேள்விச்சாலை, திருவேசும்பர், ஆகியவற்றை அறிவித்துள்ளார்.

அகநகரிற் சைவமடத்தை அறிவிப்பது மேற்கண்டபாடல். ஆடவர் பெண்டிருக்கிடையே நின்று அவர்களுக்கு ஆசையை உண்டாக்குபவன் காமவேள். அவனுடைய தொழிற்பாடு இல்லாத இடத்துக் காமவிருப்பம் நிகழுமாறில்லை. உலகத்திலேயுள்ள எல்லா உயிர்களுக்கும் இன்பம் நுகரும் விருப்பத்தை விளைவிப்பவன் அவனே. எனவே நம்போன்ற எல்லா உயிர்களின் மணவினைகளும், அவனது தொழிற்பாட்டை அடிப்படையாகக் கொண்டுதான் நிகழுகின்றன. ஆண்டவனே காமனைக் காய்ந்தவன். அகத்தே காமச் சேட்டையிற் கலங்காத உள்ளமுடைமையைப் புறத்தேஅவனுடையநெடுஞ்சடையும்கல்லாடையும் புலப்படுத்துகின்றன, என்று சைவமடத்திலே வாழுகின்ற முனிபுங்கவர்கள் நெஞ்சிலே யழுத்தி நாவிலே வழுத்துவார்கள்.

மனமாகிய குகையிலே இடையீடின்றி இறைவனை நிறுத்தித் தியானித்து, அத்தியான மேலீட்டினால் சிவபோகக் கொழுந்தேறலை வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந்திருக்கின்ற பெருநிலையில் வாழ்பவர் அச் சிவஞானியர். காம கோபனாகிய கடவுளைக் காலவரம்பின்றி மனச் சிறையில் அப் பெருஞானியர் ஏன் அடைத்து வைத்தல் வேண்டுமென ஒருவினாவைக் கொணர்ந்து அதற்கு விடை கூறுவார்போல 'ஆண்டவனது 'பத்திவலையிற் படும்' பரிசையும், அடியார்களது 'என்றுஞ் சிவனருளிணையே எண்ணுகின்ற இயல்பையும் அறிவுறுத்துகின்றார் ஆசிரியர்.

அகத்தே காமனை முனிந்த கடவுள் புறத்தே அதற்குரிய வேடத்தைப் பூண்டிருந்தும், இளநங்கை யொருத்தியின் கொங்கைத்தழும்பைஅங்கத்திற் கொண்டிருப்பது குற்றமாகுமல்லவா? எனவே துறவுநிலைக்குக் குறையளிப்பதாகிய குற்றத்தைச் செய்த கச்சிப்பெருமானைச் சிறை

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்நாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

இரண்டு வாரங்களுக்கு முன் வடலூரில் அவர்களுடைய... விழாவைக் கொண்டாடுவதற்கு இலட்சக்கணக்கான மக்கள்கூடினர்கள்' (29.10-55 தமிழ்நாடு) என்கிறார்நவீனர். அவர்மகிழ்ச்சி அது. ஆனால் குமாரகுருபரமுனிவர் பாடிய 'வேதமென்னும் பாதபம் வளர்த்தனை' எனத் தொடங்கும் பகுதியைத் தொடர்ந்து படித்த சைவசீலர் அக்கூட்டத்தை ஒரு பொருளாகக்கொள்ளார். மேலும், 'தீக்குணத்தார் யாவரும் என்சீடர்' என்ற அடி என்சீடரெல்லாம் தீக்குணத்தாரா யிருக்கின்றனர் என்ற பொருளோடு, தீக்குணத்தாரெல்லாரும் எனக்குச் சீடராய் வந்து சேர்வர் என்ற பொருளையுந் தரக்கூடியதாயிருக்கிறது. ஆகலின் அவ்விலட்சக்கணக்கான மக்களையும் பற்றி இராமலிங்கரே கொண்டுள்ள தீர்ப்புப் புலனும்.

'வள்ளலாருக்கு முன்னே தோன்றிய நாயன்மார்களும் மற்றையோரும், தத்தம்சமயமே மற்றவற்றைவிட உயர்ந்தது என்று இறுமாப்புடன் கூறினர். வள்ளலாரோ தம் சமயத்தைமட்டும் போற்றவில்லை. மற்றச் சமயங்களுக்கும் அவர் மதிப்புக் கொடுத்தார்...' (16-10-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். நாயன்மாரின் சமயம் வேறு, இராமலிங்கரின் சமயம்வேறு என்பதை அவ்வசனத்தில் அவருஞ் சம்மதித்தார். இறுமாப்பு நாயன்மாரிட மிருந்தது, இராமலிங்கரிட மில்லை என்பதும் அவர்கருத்து. சைவசமூகம் சூடு சொரணையற்றதென அந்நவீனர் எண்ணியிருந்தாலொழிய நாயன்மார்களென விதந்து கூறுர். சைவசமூகமே! நீ அப்படிப்பட்டதுதானு? மேற் காட்டப்பட்ட 'எச்சமயமும்...' என்ற பாட்டை அவர் படித்திலரா? அதற்கருத்தந் தெரிந்திலரா? அதை மற்றவர் படித்திருக்கமாட்டாரென நினைத்தனரா? அதில் இராமலிங்கர் மற்றச்சமயங்களெல்லாம் பொய், தம் சுத்த சன்மார்க்க சங்கமாகிய சமயமே மெய் என்றனர்- அது இறுமாப்புடன் கூடிய

தாகாதா? மேலும் அந்நவீனரே 'புத்தர், நபி, ஏசு' முதலியோரை 'மகான்கள்' என்றார். அவர் 'மற்றையோரும்' என்றதில் அம்மகான்களும் அடங்குவர். அவருந் தத்தஞ் சமயமே உயர்ந்ததெனச் சொன்னவர் தான். அதுவும் இருமரப் பாகாதா? அங்ஙனமாக, இராமலிங்கரும் அம் 'மகான்களோடு வையம் முழுமையும் நின்று நில' (16-10-55 தமிழ்நாடு) வ வேண்டுமென்று அந்நவீனர் ஏன் ஆசைப்பட்டார்? தாம் எழுதுவது இன்னதென்றே அவருக்கு விளங்கவில்லை. பாவம்.

இராமலிங்கர் எல்லாச் சமயங்களையும் மதித்துப் பாடினாரென்றார் அந்நவீனர்; கண்டித்துப் பாடினாரென்றார் முன் காட்டப்பட்ட நவீனர். அவர் பாடல்களின் திரட்டு அவரைச் சார்ந்தவருக்குள்ளே அங்ஙனம் பிளந்த கருத்தை யுண்டாக்கிற்று. உண்மையில் அவர் சமயங்களை நிந்திக்கவே செய்தார். ஒவ்வொரு சமயத்திலும் வழிபடப்படுங் கடவுளையே வைது தள்ளினாரவர். 'எச்சமயத் தேவரையு மினி மதிக்க மாட்டேன்', 'நான்முகர் நல் லுருத்திரர்கள் நாரணரிந்திரர்கள் நவிலருகர் புத்தர்முதல் மதத்தலைவ ரெல்லாம்...சிறுபிள்ளைக் கூட்டம்' என அவர் பாடியது காண்க. 'இனி' என்பதற்கு முன்னுள்ள காலத்தில் அவர் பாடியனவெல்லாம் அவராலேயே ஒதுக்கப்பட்டன. காரணம் முன் கூறியாயிற்று. எம்மதமுஞ் சம்மதமென்ற கொள்கைப்பாடல்கள் அப்பகுதியைச் சேர்ந்தன. ஆகலின் அக்கொள்கை அவருக்குச் சம்மதமன்றென்பது தெரிக. பின்னுள்ள காலத்திற் பாடியனவே அவருள்ளத்தைப் பிரதிபலிப்பன. அவற்றில் சமயங்கள், சாதிகள், சாத்திரங்கள் பற்றிய நிந்தை யுண்டு. ஆகலின் அவர் எல்லாச் சமயங்களையும் நிந்தித்தவரென்பதே உண்மை

'சேய்போ லுலகத் துயிரை யெல்லா மெண்ணிச் சேர்ந்து பெற்ற, தாய்போ லுரைப்பர் சன்மார்க்க சங்கத்தவர் சாற்றுமேட்டிக், காய்போற் பிறர்தமைக் கண்டார் கசந்துட் கடு கடுத்தே, நாய்போற் குரைப்பர் துன்மார்க்கசங்கத்தவர் நானிலத்தே' எனப் பாடித் தம் சுத்த சன்மார்க்க சங்கமாகிய சமயத்திற் சேராத பிறசமயிகளை நாயென்றும், அவர் பேசுவதை நாய் குரைப்பதென்றும் பழிப்

(10ம் பக்கம் பார்க்க)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி சித்திரை-21

# அப்பர் திருநாள்

சமயப் பேராசிரியர்களுள் அப்பரும் பிள்ளையும் உள்ளனர், யாவருக்குந் தந்தைதாயாகிய இறைவனும், இறைவியும் பாலூட்டி ஞானசம்பந்தக்குழந்தை தமது பிள்ளையென்பதை உலகறியவைத்தார்கள். அந்தச் செல்வக் குழந்தையால் அப்பர் என்று அழைக்கப் பெற்றவர் திருநாவுக்கரசு சுவாமிகள். எனவே இறைவனோடு ஒப்ப வைத்தெண்ணத் தகுந்த பெருமை அப்பர்பெருமானுக்கு உண்டு என்பது உணரத்தக்கதாகும்.

சேக்கிழார்பெருமான் அருளிச் செய்த திருத்தொண்டர்புராணத்தில் இடம்பெற்றுள்ள நாயன்மார்களுள், துறவறநெறியில் நின்றவர் இருவர். ஒருவர் அப்பரடிகளும் மற்றொருவர் மூர்த்திநாயனருமவார்கள். அப்பரடிகளது துறவுச் சிறப்பை 'கந்தை மிகையாங் கருத்தும்' என்று சேக்கிழார் பெருமான் பாராட்டுவார்-

புகழனாரும் மாதினியாருமாகிய பெற்றோருக்குத் திலகவதியார் பிறந்த சில ஆண்டுகளுக்குப்பிறகு மருணீக்கியார் தோன்றி வளர்ந்து வந்தார். இளமைப் பருவத்தி

லேயே கற்பனகற்றுத் தெளிகின்ற வாய்ப்பு, அவருக்கு வாய்த்தது. செல்வக்குடியில்தோன்றிய அவர் கல்வித்துறையில் சிறப்புற்றிருந்தது, இக்காலச் செல்வச் சிறுர்களின் நினைவிலிருக்க வேண்டியதாகும்.

உலகியற் கலைகளைக் கற்பதனுல் வரும்பயன், அவ்வுலகியல் நிலையில்லாததேன உணருவதே. உலகியல் நிலையில்லாததென்பதை உணர்ந்தவர், நிலையுள்ளஒன்றைப் பற்றுதற்கு முற்படுவர். அவ்வாறு முற்படுங்காலத்து நிலையற்றனவாகிய உலக போக போக்கியங்களில் உவர்ப்பு உண்டாகும். அவ்வுவர்ப்பு. துறவறத்தை மேற்கொள்ளும்படி செய்யும். இந்தநிலை அப்பரடிகளுக்கும் வந்துதானே தீரும்?

துறவை மேற்கொள்ளுதற்குரிய துணிவைக் கொடுத்த கலையறிவுக்கு, நல்லாறு தெரிந்துணர்ந்தொழுகும் நலத்தைக் கொடுக்கும் ஆற்றல் இல்லையல்லவா? எனவே கொல்லாமை மறைந்தொழுகும் அமண்சமயம் குறுகும் சிறுமையை அவர் அடைய வேண்டியதாயிற்று என்றுலும், முன்னமே முனியாகிச் சிவத்தை யடையத் தவத்தைச் செய்திருந்தாராதலின், சூலையால் ஆட்கொள்ளும் பேற்றை அவர் பெற்றுர்,

எண்பத்தோராண்டுகள் இந்த நிலவுலகத்திலே வாழ்ந்திருந்து எல்லாப் பருவங்களின்அநுபவங்களும் நிரம்பப்பெற்றுப், புறச்சமயச் சார்புடையவராயிருந்து அச்சமயங்களின் இயல்புகளை நன்குணர்ந்து இமயம்வரை யாத்திரை செய்து நாட்டு மக்களின் ஒழுக்க வழக்க நாகரீகங்களை இனிதறிந்து நண்ணரிய சிவானந்தஞான வடிவாகி விளங்கிய அப்பர் பெருமானது அருள்வாக்கு நமக்கு நல்லின்பத்தை அளிக்க வல்லதாகுமென்பதை உணர்ந்து அத் திருவாக்குகளை இடைவிடாது ஓதுவதோடு அவரது நன்னுளாகிய **5-5-56** சித்திரைச்சதயத் திருநாளில் அவரை வழிபட்டு நலம்பெறுவோமாக.

அப்பரடிகள் அடிமலர்
வாழ்க

(7ம் பக்கத் தொடர்ச்சி)

பது சமரசவாதியெனப் போற்றப்படுவாருக்குத் தகுமா?

'உலகிலே...எல்லா மதங்களின் சாரங்களையும் பிழிந்தெடுத்து மேலும் ஏடகத்தே எழுதாத மறைகளெல்லாம் வள்ளலார் உள்ளத்திலிருந்துபெருக்கெடுத்துத்திருஅருட்பாக்களாக வெளிவந்துள்ளது' (8-2-56 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். எச்சமயத்துக்கும் சாரமாயிருப்பது அச்சமயத்தில் வழிபடப்படுந் தெய்வமே. அதுவே அச்சமயத்துக்கு உயிர். அதை மதியாதவருக்கு அச்சமயம் உயிர் போன உடல்தான். மற்றைச் சமயங்களெல்லாம் அவற்றின் தெய்வங்களை மதியாத இராமலிங்கருக்கு அத்தகைய உடலங்களே. அவற்றிலிருந்து பிழிந்தெடுக்கப்பட்ட சாரம் எப்படி ருசிக்குமோ? மணக்குமோ? சைவமும் ஒரு சமயந்தான். அதிலிருந்து அவர் பிழிந்தெடுத்த சாரம் எது? உதறித் தள்ளிய சக்கை எது? அவ்விரண்டையும் சிறிது விவரமாயேனும் அந்நவீனர் காட்டுக. ஏடகத்தே எழுதாத மறைகள் அப்பாடற்றிரட்டினுள் எந்தப் பாடல்களிற் பிரசன்னமாகின்றன? அவற்றுள் ஒரு சிலவற்றையாவது அவர் எடுத்துக்காட்ட வேண்டும்.

இராமலிங்கர்'நச்சரவ மாதிக் கொடியவுயிரத்தனையும் போயொழிக' எனச் சபித்துப் பாடியது சீவகாருணியப் பாடலா?

(தொடரும்)

## பழைய ரூபாய் நோட்டுகள்

புதுடில்லி ஏப் 28-

அசோகத்தூண் சின்னம் இல்லாத பழையரூபாய் நோட்டுகள் அனைத்தும் இன்றிலிருந்து 6மாத காலம்கழித்துச் செல்லாது. ஆனால் இவைகளை ரிசர்வ் வங்கியிலும் அரசாங்க கசானாக்களிலும் அரசாங்க ஏஜெண்டுகளிடமும் கொடுத்து மாற்றிக் கொள்ளலாம். இச்செய்தியைஇந்திய அரசாங்க நிதி நிருவாகத் துறை அறிவிக்கிறது.

## தங்கம், வெள்ளி

மதுரை மே 2.

| | | | |
|---|---|---|---|
| பாட்லா | 107 | 0 | 0 |
| சவரன் | 67 | 8 | 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 | 8 | 0 |
| வெள்ளி 100தோலா | 185 | 0 | 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 14 | 0 |

## சிவஞான சுவாமிகள் குருபூசை

திருவாவடுதுறை ஆதீனம் காஞ்சிக் கிளை மடாலயத்திலும் ஏகாம்பரநாதர் கோவில் தேவாரப் பாடசாலையிலுமுள்ள சிவஞானசுவாமிகள் திருக்கோயில்களில் மெய்கண்டார் கழகத்தினர் 500க்கு மேற்பட்ட திருத்தொண்டர்களுடன் 20-4-56ல் குருபூசை விழாவை மிகமிகச் சிறப்பாக நடத்தினர்.

மாலை 5மணிமுதல் கச்சபேசர் திருக்கோயிலில் சிவஞான சுவாமிகள் புராணம்பற்றி நீண்டதோர் விரிவுரையாற்றினர். 17-4-56ல் நடைபெற்ற கச்சியப்ப முனிவர் பெருமான் குருபூசையை ஒட்டி நடைபெற்ற சிறப்புக்களையும் விரிவாக எடுத்துரைத்தனர். இவ்விருமுனிவர் பெருமக்களும் சைவஉலகுக்கு இரண்டுபுண்ணியக்கண்கள் போன்றவர்கள். சைவமக்கள் இக்காலத்தில் குருபூசைகளைக் கொண்டாட வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்திக்கூறினர். இவ்விழாவைச் சென்னை பளையகாட் கம்பெனி உரிமையாளர்கள் மஞ்சக்கொல்லை திருவாரூர்ச் செங்குந்த சிவபக்தர்கள் செய்து தந்தனர்.

நன்றிகூறப்பெற்றுக் கூட்டம் இனிது முடிந்தது.

## பனாரஸ் வாரணாசியாகும்

இலட்சுமணபுரி ஏப் 17-

காசி என்றும் பனாரஸ் என்றும் தற்போது வழங்கும் பெயரை 'வாரணாசி, என்று சென்ற 24ம்தேதி முதல் மாற்றியமைக்க உத்தரப்பிரதேச அரசாங்கத்தினர் முடிவு செய்து விட்டனர். இதற்கு இந்திய அரசாங்கமும் சம்மதம் தெரிவித்து விட்டதாகத்தெரிகிறதுவாரணாசி என்றபெயர்காசிஎன்றபெயர்வழங்கப்பட்ட காலத்துக்கும் முந்தியதுஎன்றும்காசியின் இருமருங்கிலும் ஓடும்வருணாநதி ஆசிநதி ஆகிய நதிகளின் பெயர் வாரணாசி என்று அந்நகரப் பெயராக வழங்கியதென்றும் புராணங்களிலெல்லாம் இப்பெயரேவழங்கி வருகிறதென்றும் தெரிய வருகிறது. காசிமகாத்மியத்தில் காசிகாண்டத்திலும் மகாபாரதம், இராமாயணம் ஆகியவற்றிலும் இப்பெயரே வழங்கப்பட்டிருக்கிறது. புத்தசமய நூல்கள் சிலவற்றிலும் இப்பெயர் காணப்படுகிறது.

(5ம் பக்கத் தொடர்ச்சி)

யிட்டு நிறுத்துதல் அத்துறவிக ளாகிய முனி புங்கவர்களின் கடமையாயிற்று என்று நயம் பட ஆசிரியர் அமைத்து வைத் தார்.

இறைவன், போக வடிவங் கொள்ளுதல் உயிர்களுக்குப் போகமளித்தற் பொருட்டும். யோகவடிவங்கொள்ளுதல் யோக மளித்தற் பொருட்டுமேயன்றித் தன்னலங்கருதியில்லையென் பதை ஞானநூல்கள் நன்குஅறி விக்கின்றன. இதனை மன்மதன் எரிந்து சாம்பரானபிறகு பார் வதி-பரமேசுவரன் திருமணம் நிகழ்ந்ததென்று சொல்லும் புராணவரலாற்றினல் உணர லாம். இறைவன் திருமணம் நிகழ்ந்த பிறகுதான் இரதிதேவி வேண்டக் காமவேள் எழுப்பப் பெற்ருனென்பதும் நினைவு கூரத்தக்கதாம்.

யோகியர் இறைவனைத் தமது உள்ளத்தில் ஓங்கார வடிவமா கத் தியானிப்பர். ஓம் என்பது அகரம், உகாம், மகரம், நாதம், விந்து என்னும் ஐந்தும்கூடிநிற் கின்ற சூக்கும பஞ்சாக்கர மெனப்படும். 'விந்துவும் நாத மும் மேவும் இலிங்கமாம்,விந்து வதே பீடம் நாதம் இலிங்கமாம்' என்னுந் திருமந்திரத்தின்படி ஓங்காரவொலிக்குத் தால சூக் கும காரணங்களாகிய விந்து நாத வடிவங்களே பீடமும் இலிங்கமுமாமென உணருதல் வேண்டும். விந்து வடிவத்தின் பக்கத்தில் நாத வடிவத்தை இட்டு எழுதுதலே பிள்ளையார் சுழி எனப்பெறும்.

உயிர்கள் பாசபந்தங்களி னின்றும் நீங்கி வீடுபேற்றை அடைவதற்கு, இறைவன் ஓங் கார வடிவமாக உள்ளத்தில் நிற்பான் 'உய்யவென் னுள்ளத் துள் ஓங்கார மாய்நின்ற, மெய் யா' என்பார் மணிவாசகப் பெருந்தகை. இவ்வுண்மையை 'ஏகம்பத்து ஓம் மொழிப் பொருள் என்பதில் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார்.

## கண்டதேவி

ஸ்ரீபெரியநாயகியம்பாள் சமேத சொர்ணமூர்த்தி ஈசுவ ரருக்கும் பரிவார மூர்த்திகளுக் கும் கொங்குமா காளியம்மன், முனீசுவரர், கருப்பணசுவாமிக் கும் வைகாசிமீ 8உ (21-5.56) திங்கட்கிழமை காலை 6 மணி அளவில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறும்.

2உ கணபதிஹோமம், வாஸ்து சாந்தி 3உ கிரகமகம் 4உ ரெட் சாபந்தனம் 5உ மாலை நாலரை மணியளவில் கலாகர்ஷணம் யாக பூசை 8உ காலை மகாகும்பாபி ஷேகம் மாலை மகா அபிஷேகம் இரவு பஞ்சமூர்த்திகளும் கொங் குமாகாளியம்மனும் புறப்பாடு நடைபெறும்.

---

## செங்கோல் ஆதீனம்

பெருங்குளம் ஏப் 15

திருக்கைலாய பரம்பரை செங்கோல் ஆதீனத்தில் மகா குருபூசை இன்று சிறப்பாய் நடந்தது. காலையில் தேவார ஆசிரியரால் இன்னிசைக் கருவி களுடன் தேவார பாராயணம் நடைபெற்றது. பூஜாமூர்த்திக்கு ஸ்நபன கும்பாபிஷேகம். அலங் கார தீபாராதனைகள் விசேஷ மாய் நடைபெற்றன. மத்தியா யானம் மகேஸ்வர பூசையும் ஏழைகளுக்கு அன்னமளிப்பும் நடைபெற்றன. பிற்பகலில் சென்னைமாகாணத் தமிழ்ச்சங்க ஆதரவில் திருவாசகப் பதிப்பு விழா ஷஷ்டிசங்கத் தலைவரும் நெல்லைமாவட்ட அருள்நெறித் திருக்கூட்டத் தலைவருமான திரு இராமசாமிக்கோனார் அவர் கள் தலைமையில் ஸ்ரீ லஸ்ரீ மகா சந்நிதானம் ஆறுமுக சுந்தர சத்தியஞானபரமாசாரிய சுவாமி கள் அருளாசியுடன் ஆரம்பமா யிற்று. நெல்லைமாவட்ட அறநிலைய உதவி ஆணையாளர் திரு, சண்முகசுந்தரம்பிள்ளை டாக்டர் திரு அண்ணாமலை பிள்ளை. திரு இமு சுப்பிரமணிய பிள்ளை, திரு எஸ் சுடலைமுத்து பிள்ளை இரா காசிவிசுவம் முத லானவர்கள் மாணிக்கவாசகர் பெருமை திருவாசகத்தின் தத் துவ விளக்கம்பற்றி விரிவாக எடுத்துச்சொற்பொழிவு ஆற்றி னார்கள்.

ஆதீனம் உயர்தர ஆரம்பப் பாடசாலை ஆசிரியர் திரு, கண பதியப்பமுதலியார் நன்றி கூறி னார். தேவார ஆசிரியர் திருவாச கம் திருப்புகழ் பாடக் கூட்டம் இனிது முடிந்தது.

இரவு சிவிகையில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம்சிவாலயவிஷ்ணு ஆலயதரிசனம் செய்தபின்னர் கொலுவில் எழுந்தருளி அன்பர் கள் அனைவர்க்கும் வெண்ணீறு அருளிப் பிரஸாதமும் வழங்கி னார்கள்.

---

# "கருகிய மொட்டு"

—[ C. K. M. ]—

அவன் இறந்துகொண்டிருந்தான். தண்ணீரில் வீழ்ந்த எறும்புபோல் தவித்துக்கொண்டிருந்தான். சாவு என்பது இவ்வளவு கஷ்டம் என்று தெரிந்திருந்தால் அவன் அவளை நினைத்திருக்கவேமாட்டான். அவன் பழைய நினைவுகளை மறந்தாலும் அவை திரைப்படம்போல் மனதிலே சுழல ஆரம்பித்தன.

சாவதற்கு இன்னும் சில நிமிடங்கள். இந்த நேரத்திலாவது நிம்மதியாக, இந்தக் கோணல் புத்திக்காரியை நினைக்காமல் நிம்மதியாக இறப்போம் என்று வாய்விட்டு அலறினான்.

என்னசெய்வது! அவளுடைய திருவுருவம்தான் அவன்மனதை விட்டு அகலவில்லையே. எண்ணங்கள் சிறகடித்துப் பறந்தன. பந்தயக்குதிரை கடந்த ஒரு வாரத்தில்வந்து நின்றது.

* * * *

ஆறுமாதங்களுக்குப் பிறகு அன்றுதான் லண்டனிலிருந்து திரும்பிவந்த மோகன், தன் காதலியைக் காணலாம் என்ற ஆவலுடன் கடற்கரைசென்று அங்குள்ள ஓர் தனிமையான இடத்தில்போய் உட்கார்ந்தான்.

அப்பொழுதுதான் அந்த மயக்குமொழிக்காரியின் சிரிப்பொலி அவன் காதிலே வீழ்ந்தது. திரும்பிப்பார்த்த மோகன் தன் காதலி சரோசா இன்னொரு ஆணுடன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தவுடன் அவன் தலை சுழலஆரம்பித்தது.பெஞ்சியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான் கீழே வீழ்ந்துவிடாமல். அவர்கள் இருவரும் பேசிக்கொண்டது அவன் காதிலே தெளிவாகக்கேட்டது.

அத்தான்! நாம் இன்று பார்த்த 'கருகிய மொட்டு' எவ்வளவு நன்றாய்இருக்கிறது.

உன்னைவிடவா சரோ! இது நன்றாயிருக்கிறது.

'போங்கள் அத்தான்! உங்களுக்கு எப்போதும் குறும்புத்தனமான பேச்சுத்தான்' என்று சொல்லிக்கொண்டே எழுந்த சரோசா மோகனைப் பார்த்து விட்டாள்.

தெரிகிறதா மோகன்? இவர் தான் என் கணவர். இவர் ஒரு இஞ்சினியர். இப்போதுதான் இந்த ஊருக்கு மாற்றலாகி வந்திருக்கிறோம் என்று அலட்சியமாகச் சொன்னாள்.

மோகனுக்கு அவள் தன்னைப் பார்த்து அலட்சியமாகச் சொன்ன வார்த்தை ஆயிரம் ஈட்டிகளை நெஞ்சில் செலுத்தியதுபோலிருந்தது.

தான் தொட்டு முகர்ந்த மலரை இன்னொருவன் தட்டிப் பறித்து முகர்வதாய் இருந்தால் பறிகொடுத்தவனுக்கு எப்படி இருக்கும்? பெரிய நீர் வீழ்ச்சியைப்போல் அவன் உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது. அவன் இதயத்திலே செதுக்கியிருந்த சித்திரம் சின்னபின்னமாகிவிட்டது.

(தொடரும்)



நேருவும் டல்லஸூம் பேசிக்கொண்டிருக்கிறார்கள்




வாய்ஸ் ஆப் அமெரிக்காவில் திருமதி சௌதாமினி மேத்தா அமெரிக்கப் பெண்களின் குடும்பவாழ்க்கைபற்றி எப்ரல் 21ந்தேதி பேசினர்

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-30
துன்முகி-சித்திரை - 28
10-5-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## பாலை

களவில் ஒழுகும் தலைவன் மணம் புரியாது வினைவயிற் செல்ல, அவனை நோக்கித் தோழி செலவுமறுத்துக் கூறியது.

தோன்றுபடு துப்போடு முரண்மிகச் சினைஇக், கோன்ற யானைச் செங் கோடு கழாஅ, வழிதுளி பொழிந்த வின்குர லெழிலி, யெஃகுறு பஞ்சிற் ருகி வைகறைக், கோடுயர் நெடுவரை யாடு நாடநீ, நல்கா யாயினு நய னில செய்யினு, நின்வழிப் படூஉமென் ரேழி நன்னுத, லிருந்திறக் கூடிய பசலைக்கு, மருந்துபிறி தின்மைநற் கறிந்தனை சென்மே 247 :-பரணர்

பழமை பொருந்திய வலிமையுடனே பகைமிகுதலாற் சினந்து, புலியைக் கொன்ற யானையின் சிவந்த தந்தம் கழுவும்படி விழுகின்ற மழையைப்பெய்த இன்குரலையுடைய மேகம் வில்லால் எறியப்பட்ட பஞ்சுபோலாகி வைகறைப் பொழுதில் உச்சியுயர்ந்த நெடிய மலையில் இயங்குகின்ற நாட்டையுடையவனே! நீ தலையளி செய்யாவிட்டாலும் விருப்பத்திற்கு மாறுகச்செய்தாலும் நினது கருத்தின்வழியே நடக்கும் எனது தோழியின் நல்ல நெற்றியிலிருந்து நிலைமிகுந்துள்ள பசலைநோய்க்கு வேறு மருந்தில்லாமையை நன்கறிந்து பின்பு செல்வாயாக.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோநீ யறியும் பூவே.

குறுந்தொகை 2

உரை:- "கொங்கு தேர் வாழ்க்கை - பூந்தாதுகளை ஆராய்ந்து உண்ணுகின்ற வாழ்க்கையையும், அகஞ் சிறைத் தும்பி - உள்ளிறகுகளையும் உடைய வண்டே, காமம் செப்பாது - என்னிடத்துள்ள பற்றுக் காரணமாக நான்விரும்பியதையே சொல்லாமல், கண்டது மொழிமோ-நீ கண்கூடாகக் கண்டதைச் சொல்லுவாயாக, நீ அறியும் பூ- நீ அறிந்த பூக்களுள், பயிலுதல் கெழீஇய நட்பின் - முன்னைப் பிறவிகளில் பயின்ற பயிற்சியால் பொருந்திய நட்பையும், மயிலியல்-மயிலினது இயலையும், செறி எயிறு - நெருங்கிய பற்களையும் உடைய, அரிவை கூந்தலின்-இவ்வரிவையின் கூந்தலைப்போல, நறியவும்-நறுமணமுடைய பூக்களும், உளவோ- உள்ளனவோ' என்பதாகும்.

சங்கமிருந்து தமிழாராய்ந்த அங்கயற்கண்ணி பங்களுகிய ஆலவாய்ச் சொக்கேசன் இயற்றியருளிய திருப்பாடல்களில் இரண்டு, தொகை நூல்களில் இடம்பெற்று அந்நூல்களுக்குச் சிறப்பை யளித்தன. அவற்றுள் ஒன்று 'மதிமலிபுரிசை' என்றும் மற்றென்று 'கொங்குதேர் வாழ்க்கை' என்றும் தொடங்கும். முன்னது பதினேராந் திருமுறையாகிய சமய இலக்கியத்திலும் பின்னது குறுந் தொகையாகிய சங்க இலக்கியத்திலும் உள்ளவையாகும்.

பிறையவிர் சடைமுடி இறையனரால் இயற்றப்பெற்ற இவ்விரண்டு திருப்பாடல்களும் வேண்டுவார் வேண்டுவதேயீயும் 'ஆண்டவனது பேரருட்டிறத்தையும்' ஆண்டவனிடத்து உண்மையன்பு வைத்து வழிபாடு செய்கின்றவர்களுக்கு எண்ணியஎண்ணியாங்கெய்தும் திண்மையுண்மையையும் செவ்விதின் விளக்குவதாகும். 'மதிமலிபுரிசை' என்று தொடங்கும் பாடல், பண்ணிசை வல்லவனாகிய பாணபத்திரனின் வறுமை நீங்குதற்பொருட்டுச் சேரமான் பெருமாளுக்குக் கொடுத்த சீட்டுக்கவி. இது திருமுகப் பாசுரம்' என வழங்கப்பெற்றுப் பதினொராந் திருமுறையின் முதற்பாடலாக அமைந்துள்ளது.

'கொங்குதேர் வாழ்க்கை' என்று தொடங்கும் பாடல், முப்போதுந் திருமேனி தீண்டும் முதற்றொண்டர் குலத்தவனாகிய தருமியின் திருமணம் நிகழும் பொருட்டுப், பாண்டிய மன்னன் ஐயுறு கருத்தை யறிந்து பாடல் செய்தாருக்கெனக் கட்டிய ஆயிரஞ் செம்பொன்னால் நிறைக்கப் பெற்ற கிழியைப் பெறும்படியாக அத்தருமிக்குக் கொடுத்த அகப்பொருட் பாடலாகும்.

மதுரைப் பதியிலிருந்து கொண்டு பாண்டியநாட்டையாண்ட மன்னர்களுள், வங்கிய சூடாமணிபாண்டியன் என்பவனொருவன். இவன் கூடல் முன்னவரது அன்னங்கண்டறியாத முடிக்குப் பன்மலர் நல்கும் நந்தனவனம்வைக்கும் பணியை மேற்கொண்டு மாதவி, பாதிரி, தாதகி, கூவிளம், மந்தாரம், தாதவிழ் மல்லிகை, முல்லை, இலஞ்சி, தடங்கோங்கம், வீதவழ் கொன்றை, கரந்தை, செழுங்கரவீரந், தண், போதவிழ் நந்தி செருந்தி, குருந்தம், புன்னாகம் முதலிய கோடு, கொடிப்பூவகைகளையும் முண்டகம், நீலம் முதலிய நீர்ப் பூவகைகளையும் அந்நந்தன வனத்தில் உண்டாக்கிச் சண்பக மரங்களைத் தனியே உடைய நந்தன வனமொன்றையும் சிறப்பாக வைத்துச் சண்பகப்பூவினாற் இண்டை, தொடை, தாமம், கண்ணியாதியனவற்றை வனைந்து சொக்கேசப் பெருமானுக்குப் புனைந்து இன்புற்றுவந்தான்.

சண்பக நந்தனவனம் வைத்துச் சொக்கேசப் பெருமானைச் சண்பகப்பூக்களால்அணிசெய்து கண்டவங்கிய சூடாமணிமாறன் சண்பகமாறனென்று பொதுமக்க

ளால் அழைக்கப்பெற்ருன். அப்பாண்டியன் ஒரு இளவேனிற் காலத்தில் தனது இன்னுயிர்த் துணைவியோடு, வெவ்விய வேடைதீர்ப்பான் சோலையொன்றில் வந்து தங்கினுன். அப்போது அங்கே ஒரு நறுமணம் வீசியது. அது எங்கிருந்து தோன்றியதென அவனுல்முடிவு செய்ய முடியவில்லை. அரண்மனைக்கு வந்தான். ஆயிரம்பொன் கொண்ட கிழியொன்றைப் புலவர் முன்னிலையிலே கட்டித் தனது ஐயந்தீரப் பாடலமைப்பவர்களுக்கு அது உரியதென உரைத்தான்.

சங்கத்தாரனைவரும் பாண்டியனுள்ளஞ்சூழ்ந்த பொருளைத் துழாவி, அறியமாட்டாது எய்த்தார்கள். அந்த வேளையில் தருமி என்னும் ஆதிசைவ வேதியன் சொக்கேசப்பெருமான் திருமுன் சென்று, வையைநாடன் மனக் கருத்தை யுணர்ந்து செய்யுளொன்றைச் செய்துதர வேண்டுமென்று வேண்டினன். அவனது வேண்டுகோளின் பயனுகக் 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற தலைப்புடைய பாடல் வெளிப்பட்டது.

இது, இயற்கைப் புணர்ச்சிக்கண் இடையீடுபட்ட நின்றதலைவன், தலைவியை நாணின் நீக்குதற்பொருட்டு மெய்தொட்டுப் பயிறல் முதலாயின அவள் மாட்டு நிகழ்த்திக் கூடித் தனது அன்பு தோற்ற நலம்பாராட்டிக் கூறியதாகும். புணர்ச்சி யெய்தி நின்ற தலைவிக்குத் தலைவன் எவ்விடத்தான் கொல்லோ? இன்னும் இது கூடுங் கொல்லோ? இவன் அன்புடையன்கொல்லோ என ஐயம் நிகழும். அவ்வையம் நீங்குதற் பொருட்டுத் தலைவன் முன்னிலையாக்கலும்சொல்வழிப் படுத்தலும் நன்னயமுரைத்தலுமாகியவற்றைச் செய்வான். இம் மூன்றும் நயப்பின் கூறு எனவும் இஃது அறிவழிந்து கூருது தலைவி கேட்பது காரியமாக வண்டு முதலியவற்றிற்குஉவகை பற்றிக் கூறுவது எனவும் நச்சினுர்க்கினியர் உரைத்தார். தொல்காப்பியம் களவியல் பத்தாஞ் சூத்திரத்து உரையில் நச்சினுர்க்கினியர் இப்பாடலைமேற்கோளாகக் காட்டி 'இதனுள் தும்பி யென்றது முன்னிலையாக்கல். கண்டது மொழிமோ' என்றது சொல்வழிப்படுத்தல், கூந்தலின் நறியவும் உளவோ'என்றது நன்னயமுரைத்தல், காமஞ் செப்பாது என்றது என்னிலத்து வண்டாதலின் எனக்காகக் கூருது மெய் கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின்

இடமணித்தென்றது. பயிலியது நட்பு' என்றது தங் நிலையுரைத்தல் என விளக்கங் கூறியிருப்பது இங்கே நினைவுகூரத் தக்கதாகும்.

வண்டுகளில் கொங்குதேர் வாழ்க்கையுடையனவும், ஊன்றேர் வாழ்க்கையுடையனவுமென இரண்டுவகைகள் உள்ளன. அவற்றுள் இங்குத் தலைவனால் விளிக்கப்பெற்றது கொங்குதேர் வாழ்க்கையுடைய தும்பி. ஊன்றேர் வாழ்க்கைத் தும்பியுண்மையை 'படுமுடை நசையே வாழ்க்கைச் செஞ்செவி, எருவைச் சேவல்'என்ற அகநானூற்றுப் பகுதியால் அறியலாம்.

ஊன்றேர் வாழ்க்கைத் தும்பி, அருளுள்ளம் அற்றதென நினைந்து, கொங்குதேர் வாழ்க்கைத் தும்பியைஇங்கே தலைவன் விளித்தான். அகச்சிறையும் புறச்சிறையுமாகிய இரண்டனுள் அகச்சிறையுடைய தும்பி விரைந்து பறக்கும் ஆற்றலுடையதாதலின் அதுவே தலைவனது குறிப்புக்கு இலக்காயிற்று.

காமஞ்செப்பாது என்றதனால், விருப்பங்கொண்டாரது மனம் வருந்தளதையும் பேசாது அவர்கள் மனமகிழும் ஒன்று உண்மைக்கு மாறுபட்டதாயினும் அதையே பேசுவது பெரும்பால் உலகியலென்பதை அறிகின்றோம். எனவே தான் கண்டது மொழிமோ என்று உண்மையைக்கூறும்படிவேண்டினன்.

தலைவி இயல்பாகவே நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நற்குணங்களையுடையவள். பயிலாத பொருட்கண் அருவருப்புத் தோன்றுதற்கு ஏதுவாகிய பயிர்ப்பு அவளிடத்திலிருக்கப் புதிதாகக் கூடிய தலைவனிடத்து அவள் எவ்வாறு நட்புப்பூண்டாள் என்று ஐயுற்று மயங்காதபடி, அவர்களிருவருக்குமிடையே உண்டாகிய நட்பு எழுமையுந் தொடர்ந்து வருவதென்று ஆசிரியர் அறிவுறுத்தினர்.

தலைவன், தலைவியைக் கண்டநிலம்குறிஞ்சியாதலின், அவளது சாயல் அந்நிலத்திற்குரிய மயிலினது போல அவனுக்குப் புலப்பட்டது. அவளது அகவுடன்பாட்டைப் புறத்தே அறிவித்தது முறுவற் குறிப்பாதலின் அதற்குரிய செறியெயிற்றை வண்டுக்கு நினைவூட்டினன்.

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

'ஒரு மடந்தை வலிந்தணைந்து கலந்த கன்ற பின்னருளம்வெருவி யென் செய்தோமென்றயர்ந்தபோது, பெருமடஞ்சேர் பிள்ளா யென்கெட்டதொன்றுமிலை நம்பெருஞ் செயலென்றெனைத்தேற்றிப் பிடித்த பெருந் தகையே, திருமடந்தை மாரிருவ ரென்னெதிரே நடிக்கச் செய்தருளிச் சிறுமையெல்லாந் தீர்த்த தனிச் சிவமே' என்ற அவர் பாடலிலுள்ள சம்பவம் அவருக்குஎன்ன புகழைத் தந்தது?

'சுத்தாத்துவித சித்தாந்த சைவத்திருநெறியை நிலை நாட்டிய சிவஞானச் செல்வர்கள் பலருள், துறவுக்கோலத்துக்கோரெடுத்துக்காட்டாக விளங்கிய தாயுமான அடிகள் முன்னணியில் நிற்பவ ராவார்கள்;... திருவருள் ஞானப் பெருஞ் செல்வப் பிழம்பாகிய திருமூலநாயனர் மரபிலே தோன்றிய மெய்கண்ட பரம்பரையில் ஞானேபதேசம் பெற்ற மௌனகுரு சுவாமிகளின் அருளுபதேசம் இவருக்குக் கிடைத்தது' என்கிறது 'செட்டிநாடு' மலர்25, இதழ்16 ஆசிரியப்பகுதி. அத்தகைய பெருமகனுரைப்பற்றி இராமலிங்கர்'தாயுமானசுவாமிகள் சுத்தப் பரப்பிரமத்தினிடத்தில் இரண்டறக் கலந்துவிட்டதாக முறையிடுவது வாஸ்தவமா? அவாஸ்தவமா? என்றுல் அவாஸ்தவம், ...தாயுமானவர்---மதசன்மார்க்கி என்று ஒருவாறு சொல்லலாம். ...நாளைச் சுத்த சன்மார்க்கம் வழங்கும்போது இவர்...உயிர் பெற்று மீளவருவார்....முன்னிருந்த அளவைக் காட்டிலும் விசேஷ ஞானத்தோடு சுத்த சன்மார்க்கத்துக் குரியவர்களாய் வருவார்....சாத்தியராய் இரண்டறக் கலப்பார்' என்கிருர். இது அச்சிவஞானச் செல்வரைக் குறைகூறியபடியாம். தாயுமானுருக்கு நாளை வரப்போவதாக இராமலிங்கர் ஜோசியங்கூறுகிற விசேஷஞானம் இப்போதுள்ள தாயுமானவரின் பாடல்களி லில்லையா? இல்லையெனத் தாயுமானுரும், இராமலிங்கர்தவிர வேறு யாருஞ் சொல்லவில்லை. அங்ஙனமாக அவரை விசேஷ ஞான

மில்லாதவ ரென இராமலிங்கர் எந்த ஆதரவு கொண்டு கண்டார்? அதுமாத்திரமா? வியாகரணம்-தொல்காப்பியம் -பாணினீயம் முதலியவைகளில் சொல்லியிருக்கிற இலக்கணங்கள் முழுவதும் குற்றமே. அவற்றில் குற்றமே சொல்லியிருக்கின்றூர்கள்' என்கிருரவர். தமிழ் மொழிக்கு வரம்பாயிருப்பது தொல்காப்பியம். அதில் அவர் கண்ட குற்றமென்ன? செய்த திருத்தமென்ன? பிற பெருமக்களேயும். பிற பெரு நூல்களேயும் பிரமாணமின்றி வாயில் வந்தபடி தூஷிப்பதில்அவரை யாராலும் வெல்லமுடியாது. நவீனருக்கு அவரது பாடற்றிரட்டைப் படித்து அவர்மேற்காதல் பிறக்கவில்லே, அவரது ஊழே அவரை அவரோடு கூட்டிவைத்தது. காதலுக்குக் கண்ணில்லே யென்பது பழமொழி. அதன்படி நவீனருக்கு இராமலிங்கர் சொன்னவையெல்லாம் இனித்தன. 'தாயுமானவரும் இராமலிங்கரும் உண்மைச் சமய வாழ்வைக்கண்ட பெரியர்' (23-7-55 தமிழ்நாடு) என்கிருர் நவீனர். மேலே காட்டியபடி தாயுமானவரை இராமலிங்கர் இகழ்ந்ததை அவர் படித்தறியார்.

பெரியபுராணத்திற் குறித்த 63நாயன்மார்களும் தத்துவங்களே ஒழிய வேறல்ல...கணபதி சுப்பிரமணிய சுவாமிகளும் தத்துவங்களே தவிர வேறல்ல. புராணங்களினிருதய மெல்லாம் தத்துவ சம்மாரமே.இதன் உண்மை சுத்த சன்மார்க்கத்தில் விவரமாய் விளங்கும்? என்ருர் இராமலிங்கர். 63 நாயன்மார்களும் சிவமாந்தன்மைப் பெருவாழ்வுபெற்ற ஆன்மவர்க்கங்களல்லராம், சடப் பொருளாகிய தத்துவங்களாம். கணபதி சுப்பிரமணிய சுவாமிகள் தெய்வங்களல்லராம், சடப் பொருளாகிய தத்துவங்களாம். புராணங்களினிருதயம் தத்துவ சம்மாரமாம். ஆகலின் அந்நாயன்மார்களேயும் அச்சுவாமிகளேயும் சங்கரிக்க வேண்டும்போலும். அவர் சம்பந்தாதியோரையும், மாணிக்கவாசகரையும், கணபதி சுப்பிரமணிய சுவாமிகளேயும் பிரமாதமாகத் துதித்துப் பாடினூர். அத்துதிகளால் அவர் சடங்களேயே வணங்கினுரென்பதாயிற்று. அந்நாயன்மார்களேயும் அச்சுவாமிகளேயும அங்ஙனந் தூஷிப்பதைக் காட்டிலும் சைவசமய தூஷணே வேறுமுண்டோ? அப்படித் தூஷித்தவரைச் சைவருள் எத்தனேபேர் சுற்றிச்சுற்றிச் திரிகின்றனர்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி சித்திரை-29

# மங்கையர்க்கரசியார் திருநாள்

சேக்கிழார் பெருமானல் 'எங்கள் தெய்வ' மெனஎடுத்தோதப் பெற்ற பெருமையை உடையவர் மங்கையர்க்கரசியார். சோழ நாட்டில் தோன்றிப் பிறந்த குலத்திற்கும், புகுந்த குலத்திற்கும் பெரும் புகழ் தேடித்தந்ததோடு, தென்னர் குலத்திற்கு வரஇருந்த தீராதபெரும் பழியையும் தீர்த்தார் இவர்.

ஆளுடைய பிள்ளையாரது அருட்கருணையும் அற்புதச் செயல்களும் தென்பாண்டிநாட்டில் நிலைநின்று பயன்தருதற்குக் காரணமாய் விளங்கியவர் அம்மையார். திருஞானசம்பந்தப் பெருமானது திருவவதாரம் எதற்காக இம்மண்ணுலகில் நிகழ்ந்ததென்பதைச் சொல்லவந்த சேக்கிழார்பெருமான் 'அவம்பெருக்கும் புல்லறிவினமண்முதலாப் பரசமயப், பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட' என்று அருளிச்செய்தார்.

இதனுல் பொய்ச்சமய நீக்கமும் மெய்ச்சமய ஆக்கமும் நிகழ்தலே அவரது திருவவதாரத்தின் குறிக்கோள் என்பது அறியப் பெறுகின்றது. அக்குறிக்கோளை நிறைவேற்றித்தந்தவர், மங்கையர்க்கரசியாரே யாவார். எனவே, ஆளுடைய

பிள்ளையாரது திருவவதார நிகழ்ச்சிக்கு ஆண்டவனது திருவருளே காரணமாயதுபோல, மங்கையர்க்கரசியாரதுதிருவவதாரத்திற்கும்அத் திருவருளே காரணமாம் என்பது உணரத்தக்கதாம். இவ்வுண்மையை உளங்கொண்டுதான் 'எங்கள் தெய்வம்' என்று பன்னிரண்டாந் திருமுறை இவரைப் பாராட்டியது.

நல்வழிப்படுங் கணவனுக்குத் துணையாயிருந்து அவனை அவ்வழியில் ஊக்குவித்தலும், அல்வழிப்படுங் கணவனைச் செம்மைப்படுத்த் திருந்திய நிலைக்குக் கொண்டு வருதலும், செந்தமிழ் நாட்டுச் சேயிழையார்க்குத் தொன்றுதொட்டு இயல்பாய் அமைந்த பண்புகளாம். இதனாலேயே 'விறல் மந்திரி மதி'யை யுடைமை மனைவியின் இலக்கணங்களுள் ஒன்று என்று ஆன்றோர் கூறினர்.

தென்னவர் குலம், படைப்புக் காலந்தொட்டுச் சிவவழிபாட்டாற் செழிப்புற்று வருவது. தொடர்ந்து வந்த அந்தச் சிறப்பு, கூன்பாண்டியனது பொய்ச்சமய நுழைவினால் இடையீடுபட்டது. இந்தப்பெரும் பழியைப்போக்க வேண்டுமென்ற எண்ணம் இளநங்கையான அரசமாதேவிக்கு எழுந்தது. பிள்ளையாரை வரவழைத்தார். நாட்டையும் மன்னனையும் நல்வழிப்படுத்தி அன்று அவர் செய்த பேருதவியால், சமணரேயாகி மொய்த்திருந்த தண் பாண்டி நாட்டில் சைவப் பெரும் பயிர்தழைக்கின்ற வாய்ப்பு உண்டாகிறது.

மங்கையர்க்கரசியாரை நெறமாறனாரது குருமூர்த்தி என்று சேக்கிழார் பெருமான் கூறுவார். வெப்பு நோய் வருத்த மெலிந்து வாடிய மீனவனுக்கு 'ஞானசம்பந்தர்' என்னும் பக்த பஞ்சாட்சரத்தை அம்மையார் உபதேசித்தார். அது. அவனது அயர்வை நீக்கியது. இங்கே அம்மையாரை 'மெய்யுணர்வளிப்போர்' என்று குறிப்பிடுவது நினைவிலிருத்தத்தக்கதாம்.

சைவத் தெய்வமாக, அவதார மூர்த்தியாக, ஆசாரிய ஞானியாக விளங்கிய அம்மையாரது திருநாள் சித்திரை உரோகிணி **12-5-56** சனிக்கிழமையாகும். எங்கள் பிரான் சண்பையர்கோனருளினாலே யிருந்தமிழ்நாடுற்றவிடர் நீக்கித் தங்கள், பொங்கொளிவெண் டிருநீறு பரப்பினாரைப் போற்றுவார் கழலெம்மாற் போற்ற லாமே.

# பிழைக்கு ஆஸ்பதம் பிடிவாதம்

சிவசூரியநாராயணபிள்ளை

திருத்திக்காட்டியுந்திருத்தம்பெ ருதார்' என்றதலையங்கம் 2-5-55 செட்டிநாடு வார இதழில்வெளி யானபின், திருநெல்வேலி சைவப்பஞ்சாங்கத்திலிருந்து வந்த செவ்வாய்தெசை சுக்கிரன் புத்தி மீ 14 நாள் 6 என்றபிழையும், செவ்வாய் தெசை சூரியன் புத்தி மீ 4 என்ற பிழையும் நடப்பு துன்முகி வருஷத்தில் திருத்தம் பெற்றது சாலவும் நன்று யது. ஏனைய பிழைகளும் திருந்திடில் எத்துணை மேம்பாடுடைத்து! துன்முகி சைவப் பஞ்சாங்கப்பக்சம் 2 அமைச்சன் ஞாயிறு என்ற பத்தியில் அனுவசியமாய் அமைச்சன் (வைகாசி மாதப் பிறப்புக்கிழமைத் தலைவன் சாந்திரமானிகள் சித்திரை மாதப்பிறப்புக்கிழமைத்தலைவன்) என்று பிடிவாதம் பேசுவானேன்? ஏனைய பஞ்சாங்கங்கள் அத்தனையுங் கூறும் அமைச்சன் சுக்கிரன் என்பதை ஆதாரமில்லாது மறுக்குஞ் சைவப் பஞ்சாங்கம் பெறும் பயன் யாதோ?

இனிச் சைவப் பஞ்சாங்க கணிதர், திருநெல்வேலிப் பாலம் மெஸ்ஸர்ஸ் எஸ் ஆர் சுப்பிரமணியபிள்ளை அவர்கள் துன்முகி வருஷத்திற்கு வெளியிட்ட திருநெல்வேலி வாக்கிய பஞ்சாங்கமும் அமைச்சன் ஞாயிறுஎன்று தான் வெளிவந்திருக்கிறது என்பர். ஆனால் இந்தப் பஞ்சாங்கத்தை அநாமதேயப் பஞ்சாங்கம் என்றும், இதன் கணிதர் இமு சுப்பிரமணியபிள்ளைதான் என்றும் 15-12-55 செட்டிநாடு வாரஇதழில் ஒருபெரியார் கூறியுள்ளார்கள். அஃதோடு இந்தப் பஞ்சாங்கம் துன்முகி வருஷத்திற்கு அமைச்சன் ஞாயிறு என்றும் கணிதர்பெயர் துலக்காமலும் கபடாக வெளிவந்திருப்பதால் இதன் கணிதரும்வெட்ட வெளிச்சம்.

அவரே கணிதர் என்பதைப் பின்னுமோர் சான்றால் நிலைநாட்டுகின்றோம்.

துன்முகி வருஷத் திருநெல்வேலி வாக்கியப் பஞ்சாங்கத்தில் செவ்வாய்தெசை சுக்கிரன்புத்தி மீ 14 நாள் 6 என்ற பிழையும்

செவ்வாய்தெசை சூரியன் புத்தி மீ 14 என்ற பிழையும்விளங்குகின்றன. இந்தப் புத்திப்பிழைக் குறிப்புகள் கரவருஷ சைவப் பஞ்சாங்கத்தில் உள்ளவைகளேயாம். அந்த வருஷத்தில் சைவப் பஞ்சாங்க கணிதரே வள்ளுவர் பஞ்சாங்கம் என மற்றொன்றையும் வெளியிட்டிருந்தார். அதிலும் மேற்கண்ட புத்திப்பிழைகள் அப்படியே யுள்ளன. வள்ளுவர் பஞ்சாங்கவாழ்வு அந்த வருஷத்தோடு முடிந்தது. அது முதலாகவே சைப கணிதருக்கு வேறாகவும் பஞ்சாங்கம் வெளியிட எண்ணம் உண்டென்பது விளங்குகின்றது. இதிலிருந்து திருநெல்வேலி வாக்கியப் பஞ்சாங்க கணிதர் இமுசுபிள்ளையேதான் என்பது நன்கு தெளிவாம்.

இன்னோன்ன காரணங்களினால் சைவப் பஞ்சாங்கப் புரட்சியைப் பலப்படுத்த அதன் கணிதர் அதற்கு பலமாய் எத்தனை பஞ்சாங்கங்கள் வெளியிடினும் அத்தனையும் ஆகாதாகா தென்பர் அறிவுடையோர்.

## திருக்கோளிலி

தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான திருக்குவளை என்னும் திருக்கோளிலி ஸ்ரீ தியாகராஜசுவாமி பிரமோற்சவம் 6-5-56ல் துவஜாரோகணம் ஆகி நடைபெற்றுவருகிறது. 12உ சந்திரசேகரர் பட்டம், 14உ வசந்தன், 18உ ரிஷப வாகனம், 20உ திருத்தேர், 23உ விசாக தீர்த்தம், 12உமுதல் 20உ வரை பேரறிஞர்களின் சொற்பொழிவுகள் நிகழும்.

## திருவிடைமருதூர்

திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான, திருவிடைமருதூர் ஸ்ரீ பிருகத்சுந்தரகுசாம்பிகா சமேத ஸ்ரீமகாலிங்கேஸ்வர சுவாமி திருக்கல்யாண மகோற்சவம் 16-5-56-ல் தொடங்கி 23-5-56ல் நிறைவுறும். 18உ அம்பாள் தவமிருத்தல், 19உ திருக்கல்யாணம் 23உ விசாகதீர்த்தம் இரவு வெள்ளி ரதம். நாடோறும் மாலையில் திருமுறைப் பாராயணமும் சமயச் சொற்பொழிவுகளும் நிகழும்.

## தங்கம், வெள்ளி

| மதுரை | மே 8. |
|---|---|
| பாட்லா | 106 12 0 |
| சவரன் | 67 8 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 67 8 0 |
| வெள்ளி 100தோலா | 186 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 14 6 |

(5ம் பக்கத் தொடர்ச்சி)

மெய்தொட்டுப் பயிறல் காரண மாகப் பலகாலும், ஒச்சுதல் பெற்றுங்கூட, ஒழியாது, கூந் தலின் இயல்பாகிய நறுமணத் தால் நீ அமர்ந்து ஆர்ந்ததை நானறிவேனாதலால், நின்னை வினவுவேனெனத் தும்பியை நோக்கித் தலைவன் கேட்பதில் எவ்வளவு பொருளிருக்கிறதென் பது ஊன்றி நோக்குவார்க்கு நன்கு விளங்கும்.

கூந்தலும் பூவுமாகியஇரண்டு பொருள்களின்பாலும் சார்ந்து பழகி அநுபவமுடையவண்டினி டம் தலைவன் வினவுகின்ற இவ் வினா, 'தாமறியாதனவற்றைத் தம்மைப்போன்ற அறிவநுபவ மில்லாத வேறொருவரிடம் வினவி, ஆழ்குழிப்பட்டழுந்து வதைத் தவிர்க' என்று உல குக்கு அறிவுறுத்துவதாக அமைந்திருக்கிறதல்லவா?

---

## இரயில்வேயில் இரண்டாம் வகுப்பு

புதுடில்லி மே 1

இந்திய இரயில்வேயில்இரண் டாம் வகுப்பு இடவசதியை எடுத்துவிடுவதன் முதற்படியாக 1956 ஜூலை 1ல் சிலசிறு கிளைப் பாதைகளில் இரண்டாம்வகுப்பு நீக்கப்படும் என்று இரயில்வேத் துறைவிடுத்துள்ள பத்திரிகைக் குறிப்புக் கூறுகிறது.

இவ்வாறு எடுக்கப்பட்ட இரண்டாம் வகுப்புப்பெட்டிகள் தேவையுள்ள பிற பாதைகளில் சேர்க்கப்படும். இரண்டாம் வகுப்பு நீக்கப்பட்ட இடங்க ளில் தேவையான பாதைகளில் மூன்றும் வகுப்பு இடவசதி யைப் பெருக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

இரண்டாம் வகுப்பு எடுக்கப் பட்டபின் தட்பவெப்பநிலை சீர மைப்பு இடவசதியும் மற்ற இரண்டுவகுப்புக்களும் இந்திய ரயில்வேயில் இருந்துவரும்.

## படித்தோம்!

திருச்சிற்றேமத் திருப்பதிகம்:- தருமபுர ஆதீனவெளியீடு எண் 363. ஸ்ரீ ல ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் 23-4-56 மாதஜன்ம நட்சத்திரநாளில் வெளியிடப் பெற்றது. தலச் சிறப்பு முதலி யன ஆர் வேலாயுத ஓதுவா மூர்த்திகளால் எழுதப்பெற் றுள்ளன.

# "கருகிய மொட்டு"

—[ C. K. M. ]—

(முன்தொடர்ச்சி)

எதற்காக ஆயிரம் மயிலுக்கப்பாலிருந்து சந்தோஷயாகவந்தானே அது இன்னொருவனுடைய சொத்து. மன்னிக்கமுடியாதகுற்றம். மன்னிக்கமுடியாத குற்றம்.

என்ன மோகன், உங்களுடைய ஆனந்தமான பொழுதுபோக்கைக் கெடுத்துவிட்டேனு? என்று சரோசாதான் கேட்டாள்.

பொழுதுபோக்கை மட்டுமா கெடுத்தாள். என் வாழ்க்கைப் படகையுமல்லவா கவிழ்த்துவிட்டாள்.

'இல்லை சரோசா! எனக்குப் படிப்பு முடிந்துவிட்டது. இனிமேல் ஒரு டிஸ்பென்ஸரி ஆரம்பிக்க வேண்டும்' என்று ஒரு வறண்ட சிரிப்பை உதிர்த்தபடியே கூறினுன்.

சரி, நான் வருகிறேன். மோகன்! என்று கூறிவிட்டு அந்தத் துடிஇடைக்காரி துள்ளியபடியே சென்றுள்.

பழிக்குப்பழி வாங்க வேண்டும் இந்தக்கோணல் புத்திக்காரியை. என்று நினைத்துப் பெருமூச்சுவிட்டான் மோகன்.

ஃ ஃ ஃ

அன்று அவன் தன் அறையில் உட்கார்ந்து வரும்நோயாளிகளைக் கவனித்துக்கொண்டிருந்தான். சரோசாவிடமிருந்து போன் வந்தது. அவருக்கு மிகவும் சீரியஸ், உடனே வாருங்கள் மோகன்.

இதோ புறப்பட்டுவிட்டேன் என்று கூறியபடியே புறப்பட்டான். ஆனல் அவன் மனம் அங்கு செல்ல மறுத்தது. தனக்குத் துரோகம் செய்த சதிகா

ரிக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும் என்று நினைத்தான். அவன் இறந்துவிட்டால், அப்பொழுதாவது அவள் மனம்என் பக்கம் திரும்பாதா? என்று எண்ணியபடியே ஏர்கண்டிஷன் பொருத்தியுள்ள அறையில் போய்ப்படுத்துவிட்டான்.

ஃ ஃ ஃ

மறுநாள் காலை. அன்றுதான் தனக்குப் பொன்னான நாள் என்று எண்ணிய மோகனுக்கு அன்றுதான் துக்க தினமாக இருந்தது. வீதியிலே இருவர் பேசிக்கொண்டு செல்வது மோகன் காதிலே வீழ்ந்தது.

இஞ்சீனியரய்யாவும் அந்த அம்மாவும் இப்படிச் சொல்லி வைத்தாற்போல இறக்கக்கூடாது. மோகனுக்குத் தலைசுற்றுவதுபோலிருந்தது.

ஃ ஃ ஃ

உன்னை ஏய்த்துவிட்டேன். ஏய்த்துவிட்டேன் என எக்காளமிட்டவளின் வாழ்வை அழித்துவிட்டேன். வெற்றி-எனக்கே வெற்றி எனக் கூச்சலிட்டான் மோகன்.

சத்தம் போடாதே மோகன்! தவறுதலாக எதையோ சாப்பிட்டுவிட்டாய். இப்படிக் கூச்சல் போடக்கூடாது என்று வெற்றியின் வாயிலிலே நின்றுகொண்டிருந்த மோகனைப் பார்த்து டாக்டர்கள் கூறினார்கள்.

நண்பர்களே! நான் தவறிச் சாப்பிடவில்லை-வேண்டுமென்றே தான் சாப்பிட்டேன்-அதுவும் சரோசாவுக்காகவே சாப்பிட்டேன் எனப்புலம்பினான். அவன் பாவம்! பயித்தியம்வேறுபிடித்துவிட்டது என்று கூறிக்கொண்டே ஒரு டாக்டர் சென்றார்.

கருகிய ரோஜாவின் இதழ்கள் காற்றிலே உதிருவதைப் போல் அவனுடைய உயிர் உடலைவிட்டுப்பிரிந்துகொண்டிருந்தது.

## நிதி உதவி

இரண்டாவது திட்டக்காலத்தில் சிறுதொழில்களுக்கு நிதி உதவி அளித்து வருவதற்காக இந்திய சர்க்கார் ராஜ்யசர்க்கார்களுக்குமொத்தம்இருபதுகோடி ரூபாய் கொடுக்கஉத்தேசித்திருக்கின்றனர்-

# உங்களுக்குத் தெரியுமா?

இந்தியா, நிலக்கரி உற்பத்தித் திட்டங்களுக்குத் தேவையான 60 துளையிடும் சாதனங்களுக்கு வெளிநாடுகளில் ஆர்டர்கொடுத்துள்ளது. அவை சோவியத்யூனியன், ஸ்வீடன், அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய நாடுகளிலிலிருந்து வாங்கப்படும்.

இந்தியாவில் சிமிட்டித் தொழிற்சாலைகளின் உற்பத்தி சக்தி, வருஷத்துக்கு 49.3 லட்ச டன்னுகை இருந்து வருவதை 1960-61ம் ஆண்டுக்குள்ளாக 121.3 லட்சம் டன்னுகை உயர்த்தத் திட்டமிடப்பட்டிருக்கிறது,

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் 40,000 ஆசிரியர்களுக்கு கிராம அபிவிருத்தி வேலைத்திட்டத்தில் பயிற்சியளிக்கப்படும.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் 14 ராஜ்யங்களில் மொத்தம் சுமார் 24 கோடி ரூபாய் செலவு மதிப்பில் சுமார் 3,756 குழாய்க்கிணறுகள் நிர்மாணிக்கப்படுமென எதிர்பார்க்கப்படுகிறது.

வடகிழக்கு எல்லைப்பிரதேசத்தில் தற்போது மொத்தம் ஆறு சமுதாய அபிவிருத்தி வட்டாரத் தொகுதிகள் வேலை செய்து வருகின்றன. மொத்தம் 61,432 ஜனத்தொகையுள்ள 206 கிராமங்கள் அவற்றின்கீழ் பயன் பெற்று வருகின்றன.

ஸ்திரீகளின் சேமிப்பு இயக்கத்தின்கீழ் இதுவரை மொத்தம் இரண்டரைக் கோடி ரூபாய்களுக்குமேல் வசூலாகியுள்ளது.

எண்ணெய்க் கிணறுகளைத் தோண்டும்வேலையிலும் இதர நுட்பச்செய்முறைகளிலும் பயிற்சி பெற்று வருவதற்காக இந்திய தொழில்நுட்ப சிப்பந்திகோஷ்டிகள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படவிருக்கின்றன.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.